# கசடதபற

Kass

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

## மூன்று ஜப்பானியக் கவிதைகள்

நடவு நடும் பெண்கள்
பாடும் பாட்டுகளிலே மட்டும்தான்
சேறு பட்டிருக்கவில்லை.

—கொனிஷ் ரெய்ஸான்

முடியாது—
மனித உள்ளத்தை
யாரும் சரிவரப்
புரிந்து கொள்ள முடியாது.
ஆனால்
நான் பிறந்த ஊரில்
மலர்கள்
முன் போலவே
மலர்ந்து
மணம் வீசுகின்றன.

—ஸுராயுகி

யாரோ கிழவன்
—நான் அறியாத அந்நியன்—
என்னைத் தடுக்கிறான்
நான் கண்ணாடியில்
பார்த்துக் கொள்ளும்போது.

—ஹீடோமாரோ

தமிழில்: க. நா. சு.



4

ஜனவரி 1971

30 காசு

1 தேவடி தெரு

ஜனவரி மாதக் கடைசியில் இரண்டாவது அகில உலக ஓவியக் கண்காட்சி டெல்லியில் நடைபெற இருக்கிறது. நாற்பத்தி ஆறு நாடுகள் கலந்து கொள்ளும் இந்தக் கண் காட்சியை மிகுந்த பொருட் செலவில் லலித கலா அகாடமி ஏற்று நடத்துகிறது.

சொல்லப் போனால் இந்தக் கண்காட்சியில் இந்தியாவின் சிறந்த ஓவியர்கள் அனைவருக்கும் பங்குபெறும் வாய்ப்பு கிடைத்திருக்கவேண்டும். இந்தியாவின் தலைசிறந்த ஓவியர்களில் ஒருவரும், நடுவருமான திரு. ஜே. சாமிநாதனை உள்ளிட்டுப் பல ஓவியர்கள் விட்டிருக்கின்ற அறிக்கைகளிலிருந்து, ஓவியர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பில் அகாடமி சரியாக நடந்து கொள்ளவில்லை என்று தெரிகிறது.

கண்காட்சிக்கு ஓவியங்களை வழங்குமாறு வேண்டப் பட்டிருந்த ஓவியர்கள் கூட அகாடமியின் போக்குக்கு எதிர் நடவடிக்கையாகக் கண்காட்சியில் பங்குபெற மறுத்திருக்கிறார்கள்.

சென்ற இதழ் கசடதபறவின் முதல் பக்கத்தில் காணப்படும் காந்தியை வரைந்த ஆதிமூலம் தனது ஓவியங்களைக் கண்காட்சிக்கு அனுப்ப மறுத்து விட்டிருக்கிறார். இது போலவே நாட்டின் இதர பகுதிக் கலைஞர்களும் செய்திருக்கிறார்கள்.

ஓவியத்துறையின் மிகப் பெரிய நிறுவனமான லலித கலா அகாடமி அரசியல் குறும்புகளுக்கு இடம் தந்துவிட்டது என்றும் அகாடமியின் பதவிக்காகப் போட்டியிட்டு நீதிமன்றங்களுக்குக் கலைஞர்கள் போகிற அளவுக்கு துறை மோசமாகி விட்டது என்றும் ஜே. சாமிநாதன் ஒரு அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார். அகாடமியின் பொதுக்குழுவின் 5F உறுப்பினர்களில் 10 பேர்தான் வரைந்துவரும் ஓவியர்கள் என்ற செய்தி, அகாடமியின் சீர்கேட்டைத் தெளிவு படுத்தும். மத்திய கல்வி இலாகாவின் அற்ப ஆசை ஆவலாதிகளுக்கும், அந்தந்த மாநில அரசியல்வாதிகளின் குறுக்கீடுகளுக்கும் உட்பட்டு அகாடமி ஆடவேண்டியிருப்பதைக் கண்டு எல்லா ஓவியர்களும் கவலைப்படுகிறார்கள்.

உலக ஓவியக் கண்காட்சி போன்ற மிக முக்கிய நிகழ்ச்சிகளின் போது மேற்கொள்ளும் ஊழல் தந்திரங்களாலும், அரசியல் மற்றும் மாமன்-மைத்துனன் விசுவாசங்களாலும் கலைத்துறை இழிவுபடுவதைப் பாடுபடும் ஓவியர்கள் யாரும் சகித்துக் கொண்டிருக்க முடியாது.

பல கண்காட்சிகளைத் தாங்களே வெற்றிகரமாக நடத்திப் புகழ் வாய்ந்த ஓவியர்களையும், இதற்கு முன் நடந்த உலகக் கண்காட்சிகளில் பங்கு பெற்றவர்களையும் கூட அகாடமி புறக்கணித்திருப்பது சிறிதும் நியாயமாகாது.

லலித கலா அகாடமியின் போக்கை எதிர்த்துத் திரண்டிருக்கும் ஓவியர்கள் அகாடமியின் சட்டதிட்டங்கள் மாற்றி அமைக்கப் படவேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். கசடதபறவோடு நேரடித் தொடர்புள்ள ஓவியர்களான ஆதிமூலம், பாஸ்கரன், தக்ஷிணாமூர்த்தி மற்றும் மூக்கையா, முனுசாமி, வரதராஜன், சந்தானராஜ், அல்போன்ஸா, சுரேந்த்ரநாத், ராஜவேலு, கே. எஸ். ராவ், கன்னியப்பன், விஸ்வநாதன், அந்தோனிதாஸ், கிருஷ்ணமூர்த்தி, சூரியமூர்த்தி, ஆகிய ஓவியர்களின் இந்த எதிர்த்தெழலுக்குக் கசடதபற தன் முழுப் பரிவையும் தருகிறது.



கசடதபற

இரு கதைகள் :

# நினைவுகள்

மா. தக்ஷிணாமூர்த்தி

எழும்பூர் நிலையத்தில் ரயிலேறினேன். உட்கார இடம் கிடைக்கவில்லை. நின்றேன். ரயில் நகர்ந்தது. இதயம் திக்கென்று அடித்துக் கொண்டது. அவள் என்ன அப்படிச் சொல்லிவிட்டாளே! நான் என்ன பலாத்காரம் பண்ணவா சென்றேன்? "இப்பொழுது அப்பா அம்மா இங்கில்லை. நான்மட்டும்தான் இங்கிருக்கிறேன். நீங்கள் இந்த மாதிரி அடிக்கடி என்னை வந்து பார்ப்பது நன்றாக இல்லை. ஏதாவது பேச வேண்டுமானால் கல்லூரியிலேயே வைத்துப் பேசி விடுங்கள்" என்றாள். ஒரு நிமிடம் எனக்கு மூச்சு எழவில்லை. பிறகு "இப்போது வந்ததற்கு மன்னிக்கவும்" என்று கூறிவிட்டு அவளுடைய அறையிலிருந்து வெளியேறினேன். பட்டப்பகல் இரண்டு மணி. ஆயினும் எங்கும் இருட்டு. அப்படி அவளுடைய வார்த்தைகள் என் கண்களை மூடிவிட்டன. எங்கும் அவளுடைய கறுத்த உருவம். பெண்ணை நம்பாதே என்று சொல்லுவார்கள். அவளும் அப்படித்தான். வெளியிலே இளஞ் சிகப்பு என்றாலும் உள்ளே கறுப்புத்தான். தட்டுத் தடுமாறி மாடிப்படிகளிலிறங்கி பங்களாவிலிருந்து விடுதலை பெற்றேன். பூனமல்லி ஹைரோடில் வந்து எழும்பூர் நிலையத்தை அடைந்தேன். தாம்பரத்திற்கு டிக்கட் வாங்கி ரயிலேறினேன்.

இவள் என்னை எவ்வளவு மோசமாக நினைக்கிறாள்? பேசுவதற்கென்றே வெறுமனே பேச்சுக் கொடுப்பவர்கள் பலர். அவர்களைப் போலல்லவா என்னையும் நினைத்துவிட்டாள்? ஏதோ நல்ல சிந்தனைகளில் ஆர்வமுள்ள பெண் என்று நினைத்தல்லவா அவளோடு பேசினேன்? இல்லாவிட்டால் அவளோடு நான் ஏன் பேசுகிறேன்? நான்தான் பெண்களோடு பேசுவதில்லையே.

அன்று முதன் முதலாக இலக்கிய மன்றத்திற்கு அவள் வந்தபோது அவளிடம் பெயரைக் கேட்கவில்லை. (அப்பொழுது நான் இலக்கிய மன்றத்தின் தலைவன்). அவளோடு வந்த இலக்கிய ஆசிரியர் சுப்பையரிடம் அவளுடைய பெயரைக் கேட்டேன். "அவளிடமே கேளுங்கள்" என்றாரவர். அவளைப் பார்த்துச் சிரித்தேன். பெயர் கேட்டேன். "மிஸ் லளிதா" என்றாள். பிறகு அவள் ஒவ்வொரு வாரமும் இலக்கிய மன்றத்திற்கு வருவதுண்டு. ஒரு நாள் சுப்பையரின் வீட்டிற்குச் சென்றபொழுது அவர் ஒரு புத்தகத்தை என்னிடம் தந்து, "இதனைப் படிக்க உங்களுக்கு ஆர்வமாக இருக்கலாம். ஜே. கிருஷ்ணமூர்த்தியின் சொற்பொழிவுகளின் ஒரு தொகை இது. படித்துவிட்டு மிஸ். லளிதாவிடம் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்" என்றார். "சரி" என்றேன். அந்த இரவு கிருஷ்ணமூர்த்தியின் புத்தகத்தைப் படித்தேன். மறுநாள் அதனைத் திருப்பிக் கொடுப்பதற்காக அவளைச் சந்தித்தேன். அந்தப் புத்தகத்தைப் பற்றி என்னுடைய கருத்தைக் கேட்டாள். 'நன்றாக இருக்கிறது, ஆனால் இவர் புதிதாக ஒன்றையும சொல்லிவிடவில்லை. சங்கராசாரியார் சொன்ன அத்வைதத்தைத்தான் இவரும் சொல்லுகிறார். இவருடைய Pure Awareness சங்கராசாரியாருடைய நிர்குணப்பிரம்மம்தான். இவர் வடமொழி வார்த்தைகளைப் பயன்படுத்தாமல் ஆங்கில வார்த்தைகளிலேயே தம் கருத்தைத் தந்துள்ளார். அவ்வளவுதான். ஆனால் அதற்காக நாம் நம்முடைய பாரம்பர்யத்தை மறக்கவோ மறுக்கவோ தேவையில்லை' யென்றேன். ரயில் சேத்துப்பட்டு நிலையத்தில் நின்றது. சிலர் இறங்கினார்கள். சிலர் ஏறினார்கள். எனக்கு உட்கார இடம் கிடைத்தது.

'கிருஷ்ணமூர்த்தியின் சொற்பொழிவுகள் அடங்கின பல புத்தகங்கள் என்னிடம் இருக்கின்றன. உங்களுக்குப் படிக்க விருப்பமானால் கொண்டு வருகிறேன்' என்றாள். 'சரி கொண்டுவாயேன்' என்றேன். பிறகு அவள் புத்தகங்களை ஒவ்வொன்றாகக் கொண்டு வருவாள். நான் அதைப் படித்துவிட்டுத் திருப்பிக் கொடுக்கும்போது தீவிரமான வாதம் நிகழ்வதுண்டு. நான் சங்கராசாரியாரின் வழி வந்தவன். அத்வைதி. பி.எஸ்.ஸி. மாணவனாக இருந்த போதிலும் தத்துவ நூல்களைப் படிப்பதில் நேரத்தைக் கழிப்பவன். அவள் ஆங்கில இலக்கியமாணவி. ஆங்கிலத்தின் வழிதான் அவளுக்குத் தெரியும். ஆகவே நாங்கள் பேசும்போதெல்லாம் தீவிரமாக மோதிக் கொள்வதுண்டு. பொழுது போவதே தெரியாமல் உலகின் அடிப்படையைப் பற்றியும் உண்மையைப் பற்றியும் வாழ்வின் குறிக்கோளைப் பற்றியும் வாதம் நடந்துகொண்டே இருக்கும். இதற்குத் தனிமையான ஓரிடம் வேண்டுமே என்று கல்லூரிக்குப் பின்னால் உள்ள காட்டில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து பேசுவது வழக்கம். உபனிஷத்தின் அமைதி நிலவுமிடம். அங்கே எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் தன்னை மறந்து பேசிக் கொண்டிருக்கலாம். சில வேளைகளில் காட்டிற்குள் நடந்து கொண்டே பேசுவதுண்டு. காட்டிற்குள் ஒரு குளம். குளக்கரையில் உட்கார்ந்து விரிந்த தாமரை மலர்களைப் பார்த்துப் பேசிக் கொண்டும் பேசாமலும் இருந்ததுண்டு. சூரியன் மேற்குத் திசையில் மறைந்து காட்டில் இருள் சூழும்போதுதான் எழுந்து காட்டை விட்டு வெளியே வருவது வழக்கம். ஒரு நாள் வகுப்பு முடிந்தவுடன் அவளைப் பார்க்கப் பெண்களின் அறைக்குச் சென்றேன். அவள் இல்லை. அவளுடைய வகுப்பில் பயிலும் ஒரு மாணவியைக் கேட்டேன். லளிதாவிற்கு உடல் நலமில்லை என்றாள். அவள் மாம்பலத்திலிருந்து வருபவள். லளிதாவும் அவளும் சேர்ந்தே ரயிலில வருவது வழக்கம். ரயில் மாம்பலத்தில் நிற்கிறது ஐஸ்கிரீம் ஸ்டாலில் சிலர் ப்ரூட்ஸாலட் அருந்திக் கொணடிருந்தனர். வண்டி நகர்ந்தது.

உடலுக்கு என்னதான் என்று பார்ப்போமே என்று அவளுடைய வீட்டிற்குச்சென்றேன். காய்ச்சல், இருமல், இன்ப்ளுவன்ஸா; அவள் படுத்திருந்தாள். அவளருகில் உட்கார்ந்தேன். மேகங்களால் மூடப்பட்ட ஆகாயத்தைப்போல களையற்றிருந்தது அவள் முகம். "தலைவலி. அந்தச் சுவரலமாரியில் குருதைலம் இருக்கிறது" என்றாள். உடனே எழுந்து குருதைலத்தை எடுத்துக் கொண்டுவந்து அவளுடைய அருகில் உட்கார்ந்தேன். நானே அவளுடைய நெற்றியில்குருதைலத்தைத்தடவலாமா என்று தயங்கினேன். அவளும் கை நீட்டாமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். குருதைலத்தை அவளுடை கைக்கருகில் வைத்தேன். அவள் சிரித்துக்கொண்டே அதையெடுத்து நெற்றியிலும் கழுத்திலும் தடவினாள். அதை அவள் என் கையில் திருப்பித் தந்தபோது அவளுடைய ஒரு விரல் என் கையில் பட்டது. திடீரென்று அவள் முகத்தைப் பார்த்தேன். தெரிந்து கொள்ளும்படியாக ஒன்றும் அங்கே இருப்பதாகத் தெரியவில்லை. குருதைலத்தை அலமாரியில் வைத்துவிட்டுத் திரும்பி வந்தேன். அவளுடைய முகத்திலிருந்து மேகங்கள் மறைய ஆரம்பித்தன. அதே சமயம் நெருப்பில் வெண்ணெய் உருகுவதுபோல குருதைலம் உருக ஆரம்பித்தது. அப்போது அவளுடைய அப்பா அங்கே வந்தார். அவர் கவர்ன்மென்ட் செக்ரடரி. அவர்கூட வந்த நாயைக் கண்டதும் பயந்து எழுந்து விட்டேன். "நாய் ஒன்றும் செய்யாது. உட்காருங்கள்" என்று சொல்லி என்னை உட்கார வைத்தார். அவள் என்னை அறிமுகப்படுத்தினாள். உடனே அவர், "உங்களைப் பற்றி இவள் என்னிடம்

சொல்லியிருக்கிறாள். இந்த வயசிலே* உங்களைப் போல தத்துவ விஷயங்களிலே ஈடுபாடுள்ளவர்களைக் காண்பது மிக அரிது. அவளுக்கு உடம்புக்கு அப்படியொன்றும் இல்லை. இன்ஃப்ளுவன்ஸா, கொஞ்சம் ரெஸ்ட் வேண்டும். அவ்வளவுதான்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து சென்றார். நாயும் அவர்கூடச் சென்றது. ஆனால் அவருடைய ஸான்னித்யம் இன்னும் அந்த அறையிலிருந்து மறையவில்லை. அந்த அறையின் சுவர்களில் அவர் வரைந்த ஓவியங்கள் மாட்டப்பட்டிருந்தன. எனக்கு எதிரில் சிவனைக் கணவனாக அடைய வேண்டும் என நினைத்துத் தவம் புரியும் பார்வதியின் உருவம். கொட்டும் மழை. கண்ணீரும் தண்ணீரும் சேர்ந்து மார்பின் வழி வயிற்றின் மேல் பாய்ந்து தொடைகள் வழி ஒழுகுவதைக் காணலாம். இளமையின் வனப்பு மிக்க தொடைகள், மார்பு எல்லாம் ஓவியத்தின் பின்னணி (background)யோடு சேர்ந்து மறைந்து விடுகின்றன. அவள் அழகு ஒரு தனி உருவத்தின் அழகாய் அமையாது இயற்கை முழுவதும் வியாபித்திருந்தது. அவ்வியற்கையில் வேட்கை அருவி சுடர்விட்டு ஒழுகுகிறது. இதனை இம்ப்ரெஷனிஸ்டிக் என்று கூறலாமா?

சத்தம் கேட்டதும் திரும்பிப் பார்த்தேன். அவளுடைய அம்மா ட்ரேயில் காப்பியைக் கொண்டுவந்து வைத்தாள் ஒரு கப்பை என் கையில் தந்தாள். அதனை வாங்கி அவள் கையில் கொடுத்தேன். பிறகு இன்னும் ஒரு கப்பை எடுத்து நான் குடித்தேன். அவளுடைய அம்மா, "உங்களை இதற்கு முன் பார்த்ததில்லையென்றாலும் உங்களைப்பற்றி இவள் சொல்லியிருக்கிறாள்" என்றாள் "இவளுக்குத் தலைவலி மாறிவிட்டது போலிருக்கிறது இன்னும் இரண்டு நாள் ரெஸ்ட் எடுத்தால் சரியாகிவிடும்" என்றேன். பிறகு இருவரிடமும் விடைபெற்றுச் சென்றேன். அந்த பங்களாவிலிருந்து நான் வெளியேறும்போது நாய் குரைத்தது.

பிறகு உடல்நலன் விசாரிக்க அடிக்கடி அவள் வீட்டிற்குச் சென்றதுண்டு. உடல்நலமான பின்னரும் அவளுடைய வீட்டிற்குச் சென்று அவளோடு பேசிக்கொண்டிருப்பது வழக்கமாகிவிட்டது.

ஒருநாள் லைப்ரரிக்கு வெளியில் நின்று மெயின் கேட்டைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது அவள் கேட்டைத் தாண்டி வருவது தெரிந்தது. அவள் வருவதைக் கண்டதும் இராமகிருஷ்ணனும் வேறு சில நண்பர்களும் என்னைப் பார்த்தனர். பிறகு அவளைப் பார்த்தனர். அவர்கள் இவ்வாறு அவளையும் என்னையும் மாறி மாறிப் பார்த்தனர். அங்கே நிற்க விரும்பாது லைப்ரரிக்குள் சென்றேன். அப்பொழுது அங்கே அமைதியாக செய்தித்தாள்களைப் படித்துக் கொண்டிருந்த பெண்கள் கலகலவென்று பேச ஆரம்பித்தனர். அவர்களில் ஒருத்தி என்னையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

அப்படியிருக்கையில்தான் திடீரென்று இந்த மாதிரிச் சொல்லிவிட்டாள். ஷாக் அடித்ததுபோல ஆகிவிட்டது. பழத்திற்குக் கசப்பு என்று சொல்வது போலல்லவா இருக்கிறது? நான் பலாத்காரம் செய்ய வந்தேன் என்றல்லவா சொல்லுகிறாள்!

தாம்பரத்தில் வண்டி நின்றது. இறங்கி நடந்தேன். விடுதியை அடைந்தேன். என் அறைக்குச் சென்று கதவைத் தாழ்ப்பாளிட்டுக்கொண்டு படுத்தேன். லளிதாவின் எதிர்பாராத நடத்தைக்குக் காரணம் என்னவென்று நினைத்துக்கொண்டே படுத்தேன். "இனிமேல் என்னை வந்து பார்க்க வேண்டாம்" என்று சொன்ன அந்த முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். வேறு ஒன்றும் கண்களுக்குப் புலப்படவில்லை. ஏன் லளிதா இந்தமாதிரிச் சொல்லுகிறாய்? இவ்வளவு நாள் நடந்ததெல்லாம் பொய்யா? நான் என்ன செய்துவிட்டேன்? ஏதோ குற்றவாளியைக் கண்டிக்கிற மாதிரி பேசுகிறாயே என்று சொல்லி அழுவது போன்ற ஒரு உணர்ச்சி. ஆனால் அழுகை வரவில்லை. கோபம் வருவதுபோல் இருந்தது. ஆனால் கோபமும் வரவில்லை. "ஏன் லளிதா பேசமாட்டாயா" என்றேன். அவள் அருகில் வந்தாள். தவறுதலாகச் சொல்லிவிட்டோமே என்று வருந்துவது போலிருந்தது அவள் முகம்; அவள் என் நெற்றியில் கை வைத்தாள். என்ன சுடுகிறதே. நான் தவறுதலாக ஏதோ சொல்லி விட்டதை மனதில் வைத்துக் கொள்ளாதீர்கள். உங்களைப் பற்றி என்னவெல்லாமோ சொன்னார்கள். அதை நம்பிவிட்டேன். "நான் சொன்னதை மறந்துவிடுங்கள்" என்றாள். அவள் அழுவதுபோலிருந்தது. ஒரு சொட்டுக் கண்ணீர் என் கன்னத்தில் வீழ்ந்தது. அவளுடைய கண்கள் நிறைந்திருந்தன. "லளிதா, நீயாவது என்னைச் சரியாகப் புரிந்துகொண்டாய் என்று நினைத்தேன். அவ்வாறில்லையே என்றுதான் வருத்தம்' என்றேன். "இப்பொழுது தப்பெண்ணம் மாறிவிட்டது. உங்களைச் சரியாகவே புரிந்து கொண்டிருக்கிறேன்" என்றாள். "அது சரி, நீ அழுகிறாயே, உன்னுடைய கண்ணீர் இன்பக் கண்ணீரா துன்பக் கண்ணீரா' என்று கேட்டேன். "இரண்டுமே" என்றாள்.

பிறகு பத்துப் பதினைந்து நாட்கள் மன அமைதியே இல்லை. அவளைப் பார்க்க வேண்டும், பார்த்துப் பேசவேண்டும் என்ற ஆசை எழுந்தது ஆனால் அவள் இப்படிச் சொல்லிவிட்டாளே, அவளோடு பேசக் கூடாது, அவளைப் பார்க்கக்கூடாது என்ற எண்ணமும் எழுந்தது. நான் அவளைச் சந்திக்கவில்லை. ஆனால் அவளைப் பார்க்கவேண்டும், அவளருகில் உட்கார்ந்து பேசவேண்டும் என்ற தாகம் எழுந்தது. முன்பில்லாத சில ஆசைகளும் எழுந்தன. எதுவாயினும் இந்தமாதிரி இருந்தால் முடியாது. நிச்சயமாக ஏதாவது ஒன்றைச் செய்துவிட விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும். "உன்னை எப்போது தனியாகப் பார்க்கலாம்?" என்று கேட்டேன். அதற்கு அவள், "இப்போது என் உடல் சரியாக இல்லாததால் கல்லூரி விட்டதும் வீட்டிற்குப் போய்விடுகிறேன்" என்றாள். பிறகு பேச்சை மாற்றுவதற்காக இன்டர் கொலீஜியேட் பேச்சுப் போட்டியைப் பற்றியும் அதில் அவள் கலந்துகொள்ளப் போவதைப் பற்றியும் சொன்னாள். ஆனால் எனக்கு அதைப்பற்றிப் பேச மனம் வரவில்லை ஓரிரண்டு நிமிடம் என்னவெல்லாமோ உளறிவிட்டு அங்கே நிற்க மனமில்லாது விடைபெற்றுக் கொண்டேன்.

அவளை அதற்குப்பின் சந்தித்ததில்லை. இரண்டு மூன்றுதடவை அவளைச்சந்திப்பதற்காகப் பெண்களின் ஓய்வுக் கூடத்திற்குச் சென்றதுண்டு. ஆனால் அப்போதெல்லாம் வேறு யாராவது வந்து, "மிஸ் லளிதா இங்கில்லை" என்று சொல்லுவது வழக்கம். அதற்குப் பிறகு நான் அவளைத் தேடிச் சென்றதே இல்லை. ஆயினும் அவள் இன்னும் என் மனதிலிருந்து மறையவில்லை. கடைசியாக என்னோடு பேசின அவளுடைய அந்த உணர்ச்சியற்ற ஆனால் அழகான முகம் எப்போதும் என் முன்னில் வந்து நிற்கிறது.

நேற்று சென்னையிலிருந்து வந்த டாக்டர் ராமனைப் பார்த்தேன். அவர் அவளுடைய அப்பாவின் ஆப்த நண்பர். அவரிடம் அவளைப் பற்றியும் அந்த நாயைப் பற்றியும் விசாரித்தேன். அவள் இப்போது அமெரிக்காவில் மின்னிசோட்டாப் பல்கலைக் கழகத்தில் பி.எச்.டிக்குப் படிக்கிறாள். இரண்டு வருடங்களாகின்றன. அந்த நாய்—செல்லமாக வளர்க்கப்பட்ட நாய் அது—மூன்று வருடங்களுக்கு முன் இறந்துவிட்டது.

●

# அன்பு நிலையம்

மா. தக்ஷிணாமூர்த்தி

'கவிதைக் குர'லுக்காக ஒரு மெக்ஸிகன் கவியான ஒக்டாவியோ பாஸின் கவிதைபற்றி ஜூடித் பெர்னைட் என்னும் அம்மையார் எழுதின கட்டுரையை நான் மலையாளத்தில் மொழிபெயர்க்க ஒரு ஞாயிற்றுக்கிழமை கொண்டு அதற்குப் பிரதியெடுத்துத் தந்தவள் அவள் தான்.

"இது யாருடைய கையெழுத்து? உங்களுடையது மாதிரி இல்லையே? மிகவும் நன்றாக இருக்கிறதே! உங்களுடைய தங்கையினுடையதா" என்று கேட்டார் எனது நண்பரும் 'கவிதைக் குர'லின் ஆசிரியருமான எஸ் நாயர்.

"தங்கையினுடையது அல்ல. எம். ஏ. மாணவியான லளிதாவினுடையது. ஒரே நாளில் எழுதிக் கொண்டு வந்துவிட்டாள். ரொம்பவும் சமர்த்துப் போலிருக்கு" என்றேன்.

"சமர்த்து மட்டுமல்ல, சுந்தரியுங்கூட" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே, "ஆனால் மற்றவர்களைப் போல அவளும் கெட்டுவிடக் கூடாது. அந்த ஜானகியைப் பாருங்கள். முதல் வருடம் படிப்பில் மிகவும் கவனமாக இருந்தாள். பிறகு எப்படியெல்லாமோ போய்விட்டாள். முகத்தின் தெளிமை மாறி அருவருப்பு வந்துவிட்டது. 'ஆணின் ஒரு பங்குதான் காதல், பெண்ணின் முழுமையும் காதல்' என்று சொல்லுவது எவ்வளவு உண்மை பார்த்தீர்களா? அவளுக்கு என்னவெல்லாமோ நடந்து விட்டது. இல்லையா?" என்று கேட்டார்.

"ஆமாம் நானுந்தான் கவனிந்து வருகிறேன். இத்தக் கல்லூரியில் தமிழ் படிக்கத் தெரிந்த ஒரே ஒரு மாணவி அவள், இலக்கியத்தில் ஆர்வமுடையவள் என்ற முறையில் நான் அவளுக்குச் சில நல்ல தமிழ்ப் புத்தகங்களை வாசிப்பதற்காகக் கொடுத்தேன். அவளும் ஆர்வத்தோடு வாசித்தாள். ஆனால் இப்போதெல்லாம் அவள் என்னருகில் வருவதே இல்லை. அவளுக்கு என்னவெல்லாமோ நேர்ந்து விட்டது. உருக்குலைந்து எதையோ பறிகொடுத்தவள் மாதிரி காணப்படுகிறாள். பேச்சிலும் நடத்தையிலும் ஒரு நிதானம் இல்லை" என்றேன்.

"உயர் குல மாதர் தவறிவிட்டால் முற்றுந்தவறி விடுவார்கள். நிலையில்லாத கயத்தில் இறங்கினது மாதிரி. மற்றவர்கள் எதையும் சமாளித்துக்கொள்வார்கள். அவர்களுக்குத் தான் அது பழக்கமாயிற்றே" என்றார் அனுபவவேந்தர் எஸ். நாயர்.

இரண்டரை ரூபாய்ப் பேரம் பேசித்
தரையிலுடுபுடவை விரித்தாளவள்.

என்ற அவருடைய வரிகள் ஞாபகம் வந்தன. மெல்லச் சிரித்துக் கொண்டு அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன்.

அப்படிப்பட்ட அந்த லளிதாவின் வீட்டிற்குத் தான் போக வேண்டுமென்று நினைத்தேன். அவளுடைய தகப்பனார் ஒரு ரிடையர்டு டைப்பிஸ்ட். தாய் ஏதோ அரசாங்க அலுவலகத்தில் அப்பர்டிவிஷன் கிளார்க். நல்லதுதான். போய்ப்பார்க்க வேணும்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை ஆறரைமணிக்கு 'அன்பு நிலையம' என்ற பெயர் சூடின அந்த வீட்டிற்குள் நுழைந்தேன். கதவைத் தட்டிவிட்டு கூடத்திற்குள் நுழைந்து நாற்காலியில் உட்கார்ந்தேன். அவளுடைய அப்பா வந்தார். எழுந்து வணக்கம் சொல்லிவிட்டு உட்கார்ந்தேன்.

"இங்கிருந்து ஆறுமைல் தொலைவில் ஸ்வாமியார் மடம் என்று ஒரு மடம் இருக்கிறது. அந்த மடாதிபதி மிகவும் நல்லவர். அவருடைய குருநாதர் ஹனுமான் சாமி மூன்று வருடங்களுக்கு முன்புதான் சமாதியானார். சாமியார்களிடையே இவ்வளவு நேர்மையான ஒருவரை நான் கண்டதில்லை. நீங்கள் அங்கே போயிருக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

'நான் சாமியார்களிடமெல்லாம் போவதில்லை. எனக்கு நம்பிக்கையில்லை என்பதல்ல. அதைப்பற்றியெல்லாம நினைத்துப் பார்த்ததில்லை. நினைத்துப் பார்க்க வேண்டும் என்ற எண்ணமும் இல்லை' என்றார்.

மேசை மீது 'சோவியத் நா"டின் இரு இதழ்கள் இருப்பதைக் கண்டேன். பிறகு அவர் முகத்தைப் பார்த்தேன் நான் பார்த்ததை அவர் கவனிக்கவில்லை. பிறகு பல்கலைக் கழகத்தில் நடக்கும் ஊழல்கள், அரசாங்கத்தில் நடக்கும் ஊழல்கள், இப்படி எனக்கு ஈடுபாடில்லாத பல விஷயங்களைப் பற்றிப் பேசிப் பொழுது போக்கினேன். லளிதாவின் தங்கை—ஒன்பதாவது வகுப்பில் படிப்பவள்—வந்து காப்பியை மேசை மீது வைத்தாள். அதனை யெடுத்துக் குடித்தேன். காப்பியைக் கொண்டு வந்தவள் லளிதாவைப் போல ஒல்லியாகவும் இல்லை, நோஞ்சானாகவும் இல்லை. இவள் வயது வரும்போது பலரையும் ஆட்டி வைப்பாள் என்று நினைத்தேன்.

லளிதாவின் அப்பா உள்ளே சென்றார் மென்மையான ஆனால் களிப்பற்ற குரல் கேட்டது. அவள் தான். என்ன சொன்னாள் என்று தெரியவில்லை. அவர் கூடத்திற்கு வந்து "லளிதாவிற்குத் தலைவலி அதனால்தான் இந்தப்பக்கம் வரவில்லை" என்றார்.

"வெறும் தலைவலி மட்டுந்தானா? சில வேளைகளில் தலைவலி ஏதாவது தீவிரமான நோயின் அறிகுறியாக இருக்கலாம். டாக்டரைக்காட்டினீர்களா?" என்றேன்.

'அப்படியொன்றும் இல்லை அவளுக்குப் பொதுவாக உடல்நிலை ரொம்ப மோசம்! சரியாகச் சாப்பிடுவதில்லை. ஒரு உருளை சாப்பிட்டுவிட்டு எழுந்து விடுவாள் சிறு குழந்தை மாதிரி' என்றார்.

அவருக்கு வணக்கம் சொல்லிவிட்டுக் குடையை எடுத்துக்கொண்டு வெளியேறினேன். 'அன்பு நிலையம்' என்ற போர்டு என்னைப் பார்த்து இருட்டில் ஏளனஞ் செய்த மாதிரி இருந்தது.

பேட்டை ரயில் நிலயத்திலிருந்து 'கூ'வெனக் கதறிக்கொண்டு ஒரு ரயில் ஓடுவதைக் கண்டேன். ●

---

## திட்டமற்ற...

வானம் கட்டுப்பாடற்று,
பெற்றுத் திரிய விட்ட
மேகங்கள்,
பொல்லா வாண்டுகள்.
நினைத்த இடத்தில், கவலையற்று,
நின்ற தலையில் பெய்து விட்டு,
மூலைக்கொன்றாய் மறையுதுகள்,
வெள்ளை வால்கள்!

—எஸ். வைதீஸ்வரன்

# ஒரு இலக்கியாசிரியனின் நாட்குறிப்புகளிலிருந்து

**க. நா. சுப்ரமண்யம்**

**1934—ஜூலை 11,** சுவாமிமலை

இன்று அப்பாவோடு மறுபடியும் சண்டை. இந்த மாதத்தில் இது இரண்டாவது—ஆண்டில் இருபதாவது.

நானும் சண்டை போடாமல் இருக்கவேண்டும் என்றுதான் பார்க்கிறேன். அப்பா சொல்ல, நான் சொல்கிறேன். நான் சொல்ல அப்பா சொல்கிறார். பேச்சு வளருகிறது.

எப்படியாவது ஒதுங்கிப் போய்விடத்தான் வேண்டும். இங்கு அப்பாவுடன் இருந்துகொண்டு நான் எதிர்பார்க்கிறபடி எழுத இயலாது. எப்படியோ, ஏதோ சொல்லி, மன நிம்மதியைக் கெடுத்துவிடுகிறார். ஆனால் எனக்கே தெரியவில்லை. மன நிம்மதியில்லாத போது எழுத்து ஓடுகிறதா—அல்லது மன நிம்மதி இருக்கிறபோது எழுத்து ஓடுகிறதா? நிச்சயமாகச் சொல்லத் தெரியவில்லை.

**ஜூலை 13.**

அப்பாவோடு சண்டை வருவதற்குக் காரணம் என்ன என்று யோசித்துப் பார்க்கிறேன். புரியமாட்டேன் என்கிறது.

எனக்கும் அப்பாவுக்கும் மனப் போக்கில் அதிக வித்தியாசம் இல்லை; மனப் பக்குவத்தில்தான் ஏதோ வித்தியாசம் இருப்பதுபோலத் தெரிகிறது. எனக்குத் தெரிந்த மற்ற தகப்பன்மார்களைப்போல அவர் ''நீ வேலைக்குப் போ; சம்பாதித்துப் பணம் கொண்டு வந்துகொடு'' என்று சொல்லவில்லை. ''எழுதப் போகிறாயா? உன் சுதந்தரத்தைக் காப்பாற்றிக் கொள்'' என்கிறார். உண்மையில் எனக்குள்ள சுதந்திரம் இந்தத் தலைமுறையில் வேறு யாருக்காவது இருக்குமா என்பது சந்தேகம்தான். மற்றவர்கள் குடும்பப் பொறுப்புகள் என்கிற சுமைக்குப் பணிய வேண்டியதாக இருக்கிறது. எனக்கு அதுகூட இல்லை. ''நான் சம்பாதித்திருப்பது உனக்குப் போதும். பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் நீ எழுதலாம்'' என்றுதான் அப்பா சொல்கிறார்.

பின் ஏன் சண்டை வருகிறது? சமீபத்தில் ஏற்பட்ட சண்டைக்குக் காரணம் ஒரு சில்லறை விஷயம் உண்மையிலேயே சில்லறை விஷயம்தான். அப்பா மாதம் பிறந்ததும் சம்பளம் வாங்கியதும் ''இந்த மாதத்துக்கு உன் செலவுக்கு'' என்று என் கையில் நூறோ ஐம்பதோ கொடுத்துவிடுவார். இது இரண்டு மூன்று ஆண்டுகளாகவே பழக்கம். அன்று நண்பர் ஒருவர் கோஷ்டியுடன் கும்பகோணத்துக்கு நடந்து போய்விட்டு, ஆறேழு பேராக ஆரியபவனில் டிபன் சாப்பிட்டுவிட்டுத் திரும்பினோம். இரவு எட்டரை மணிக்கு வீடு வந்ததும் அப்பா, வாசலில் ஹரிகேன் லைட்டில், ருட்யார்ட் கிப்ளிங்கின் Limits and Renewals சிறுகதைகளைப் படித்துக்கொண்டிருந்தவர் என்னுடன் சாப்பிட வந்தார். டிபன் பலமானதால் எனக்குச் சாப்பாடு அதிகமாகக் கொள்ளவில்லை. அதுபற்றி அக்கா (அதாவது தகப்பனரைப் பெற்ற பாட்டி) ''ஏண்டா இப்படிக் கண்டதைத் தின்று உடம்பைக் கெடுத்துக் கொள்கிறாய்?'' என்று கேட்டாள். உடனே அப்பா ஒன்றும் சொல்லிவிடவில்லை. வாசலில்போய்ப் புஸ்தகத்தை எடுத்து என்னிடம் தந்தவர் ''இந்தக் கதைகள் எனக்கு அவ்வளவாகப் புரியவில்லை'' என்றார். ''உனக்கு Serious விஷயங்கள்தான் பிடிக்கிறது. லேசான ஹாஸ்யமாக இருந்தாலும்கூட உனக்குப் பிடிக்கமாட்டேன் என்கிறது'' என்றேன். உதாரணமாக அவரால் P. G. Wodehouse புஸ்தகம் ஒன்று படிக்கவே முடியவில்லை என்பதைச் சுட்டிக் காட்டினேன். நான் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே படிக்க அந்த நாவலை – The Small Bachelor — அப்பாவினால் பத்து பக்கங்கள் கூடப் படிக்க முடியவில்லை. அதை நான் சுட்டிக் காட்டியது தான் அப்பாவுக்குக் கோபம் வரக் காரணமாக இருந்தது என்று நினைக்கிறேன்.

''இன்று கும்பகோணத்தில் ஓட்டலில் எத்தனை செலவு?'' என்று கேட்டார்.

''இரண்டு மூன்று ரூபாய் ஆச்சு. ஏன்?'' என்றேன், புரியாமல்.

''உன்னோடு இன்று வந்து சாப்பிட்டார்களே அவர்களில் ஒருவராவது என்றைக்காவது ஒருநாள் உனக்கு டிபன் வாங்கித்தரக்கூடிய ஸ்திதியில் இருக்கிறார்களா?'' என்று கேட்டார் அப்பா.

''அப்படி நினைத்துப் பார்க்கவில்லை நான். அது அவசியம் என்றும் தோன்றவில்லை'' என்று சற்றுக் கடுமையான குரலிலேயே பதில் அளித்தேன்.

''உனக்கு அவசியம் என்று தோன்றாமலிருக்கலாம். ஆனால் பணம் நான் தந்த பணம். மாதம் பதினைந்து தேதியாகும்போது மாதப் பணம் தீர்ந்து விட்டது—மேலும் பணம் வேணும் என்று நீ என்னிடம்தானே கேட்பாய்!''

உண்மைதான் என்று உணர்ந்து எனக்கும் கோபம் பிரமாதமாகத்தான் வந்தது. ஆனால் கோபத்தை அடக்கிக் கொண்டு ''இந்த மாதம் கேட்க மாட்டேன்'' என்றேன் அழுத்தம் திருத்தமாக.

அதோடு விட்டு விட்டு, அப்பா ''கதையை மேலே படி'' என்றார். உரக்க அவருக்கு நான் விரும்பிய பல விஷயங்களையும் படித்துக் காட்டுவது பழக்கம். அதேபோல அன்றும் Limits and Renewals நூலில் உள்ள கதையைப் படிக்க ஆரம்பித்து முதல் வரியைப் படித்திருப்பேன். அதற்குள்தான் பாதித் தமிழிலும் பாதி அழுத்தமான ஆங்கிலத்திலுமாக மேலே சொன்ன சம்பாஷணை நடந்தது. கதையைப் படிப்பதை நிறுத்திவிட்டு,

நான் "அடுத்தமாதம்முதல் நீ பணம் தர வேண்டாம்" என்றேன்.

"இந்தப் பேச்சைத்தான் கண்டது" என்றார் அப்பா.

இப்படியாக யுத்தம் தொடங்கிவிட்டது. அவரும் ஓய்வதாக இல்லை; நானும் ஓயத் தயாராக இல்லை. அக்கிரஹாரத்து அமைதியைக் குலைத்துக் கொண்டு எங்கள் குரல் ஒலித்தது. இரவு பதினொன்றரை மணி வரை அவரவர் நியாயம் என்று மனத்தில் பட்டதை, மற்றவருக்கு அது எப்படிப்படும் என்கிற நினைப்பே இல்லாமல் எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தோம். தெருவில் யாராவது விழித்துக் கொண்டிருந்து கேட்டுக் கொண்டிருக்கப் போகிறார்களே என்கிற நினைப்பே இருவருக்கும் கிடையாது. கேட்பினும் பாதகம் இல்லை. எங்களுக்குள் விஷயம் இது.

படிப்பு முதல் வரியோடு நின்று விட்டது. நான் படுக்க எழுந்து மாடிக்குப் போகும்போது அப்பா "புஸ்தகத்தை வைத்துவிட்டுப் போ" என்றார்.

நான் கோபமாக "உன் பணத்தில் வாங்கிய புஸ்தகம்தானே!" என்று சொல்லிவிட்டு, திண்ணை மேல் புஸ்தகத்தைப் படாரென்று வைத்துவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே போனேன்.

கூடத்தில் அக்கா தூணில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருந்தாள். "தூங்கவில்லையா அக்கா?" என்றேன்.

"என்னடா சண்டை, ராஜா?" என்றாள் அக்கா.

"வழக்கம்போலத்தான்." என்று சொல்லிக் கொண்டே மாடிப்படி யேறினேன்.

அக்கா சொன்னாள்: "ராஜியை அழைச்சுண்டு வர நாளாச்சு. அப்பாவோடு சண்டைப் போட்டுக் கொண்டிருந்தால் எப்படி?" என்றாள்.

"அப்பா பணத்தில் அவளும் இங்குவந்து தின்டாக வேண்டுமாக்கும்" என்றேன்.

"அவள் வந்துவிட்டால் இந்த சகவாஸத்துக்கெல்லாம் இடம் இராது. எனக்கும் ஒண்டியாக வேலை செய்ய முடியவில்லையேடா ராஜா" என்றாள் அக்கா.

இதுவும் — அக்கா சொன்னதும் — நிலைமையைச் சமாளிக்க ஒரு வழியாக இருக்கலாம் என்று எனக்கு அப்போதுதான் தோன்றியது. ஆனால் நிலைமையைச் சமாளிக்க நான் விரும்பவில்லை. எப்படியாவது அந்தச் சூழ்நிலையிலிருந்து தப்பிவிட்டால் போதும் என்று தோன்றியது. அப்பா சொன்னது நியாயம்தான் என்று எனக்குத் தெரியாமல் இல்லை; நான் சொன்னதிலும் நியாயம் இருந்தது என்று அப்பா ஏன் ஒப்புக்கொள்ளமாட்டேன் என்கிறார்.

ஜூலை 20.

இன்று சிதம்பரத்திலிருந்து கடிதம் வந்தது. அவர்கள் வீட்டில் ஏதோ விசேஷம் — நான்வந்து ஒரு வாரம் இருந்துவிட்டுப் போகவேண்டும் என்று அப்பாவுக்குத்தான் எழுதியிருந்தார்கள்.

"போய்விட்டுத்தான் வாயேன்" என்றார் அப்பா.

"ரெயில் செலவுக்குநான் எழுதிப் பணம் சம்பாதித்துக் கொண்டுதானே மாமனார் வீட்டுக்குப் போக வேணும்" என்றேன் நான்.

"நன்னாருக்குடா இது" என்றாள் அக்கா.

"நீ சம்பாதிச்சுண்டு போறவரையில் காத்திருந்தால் அவள் கிழவியாகிவிடுவாள். கையில் நூறு ரூபாய் தருகிறேன். போய் ஒரு வாரம் இருந்துவிட்டு வா" என்றார் அப்பா.

நான் பதில் சொல்லவில்லை. "வேண்டாம் உன் பணம்" என்று சொல்லலாம்தான். ஆனால் சொல்லவில்லை.

ஆகஸ்டு 3.

அப்பா நேற்றுக் கொடுத்த நூறு ரூபாய் பணத்தை எடுத்துக்கொண்டு, நான் சென்னைக்கு டிக்கட் வாங்கிவிட உத்தேசித்தேன். ஆனால் சிதம்பரத்துக்கு, மாமனார் வீட்டுக்குப் போவதாகச் சொல்லிவிட்டுத்தான் கிளம்பினேன். சிதம்பரத்தின் குதிரை வண்டி வாசலில் வந்து நிற்கும்போது அப்பா இன்னொரு நூறு ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்தார். "ஏதாவது அவள் கேட்பாளானால் வாங்கிக் கொடு, அப்பாவைக் கேட்டுப் பணம் வரவழைத்து வாங்கித் தரேன் என்று சொல்லி உன் கௌரதையைக் குறைத்துக் கொள்ளாதே!" என்றார். "பத்து நாட்களுக்கு மேல் தங்காதே—முடிந்தால் நாலைந்து நாளிலேயே திரும்பிவிடு" என்றார்.

இப்படிக் கேட்காமலே பணம் தருகிற தகப்பனாரிடம் சண்டைப் போட்டுக் கொள்கிறாயே என்று கேட்பது போல என்னை அக்கா பார்த்தாள். அவள் என்னைப் பார்த்த பார்வைக்கு அர்த்தம் எனக்கு நிதரிசனமாகவே தெரிந்தது. நேரே சென்னைக்குப் போவது என்கிற என் தீர்மானம் தளர்ந்தது. "சிதம்பரத்திலிருந்து அப்படியே பட்டணத்துக்குப் பத்து நாள் போய்விட்டு வந்தாலும் வரேன்" என்றேன் அப்பாவிடம்.

"பணம் போதுமாடா?" என்றார் அப்பா. பிள்ளை கஷ்டப் படக்கூடாதே என்று அப்பாவுக்கு அவ்வளவு கவலை. நான் சொன்னேன்: "பட்டணம் போற

---

## கொடும்பாவி

காய்ந்த வைக்கோலால்
கட்டி வைத்துத்
துணி போர்த்தி
கரித்துண்டால்
அரக்கிப் பல்வரிசை
அரக்கன் கொடு மீசை
உடல் முழுதும்
கறுப்புத் தார் அங்கி
தாரை தப்பட்டை
தரங்கெட்ட ஒப்பாரி
செருப்புப் பூக்களால்
செய்த மலர்மாலைச்
செண்டாக்கி
எரியூட்ட
இழுத்து நடப்போரே—
எதற்குக் கொடும்பாவி?
எரிக்கின்ற உடலுக்கோ
இளகாத மனதுக்கோ?

—ப. கங்கைகொண்டான்

வரையிலும் இந்தப் பணம் போதும். மேலே வேணு மானுல் எழுதுகிறேன்'' என்றேன்.

அக்கா இதற்குள் வாசலில் வந்து ''உன் பெண்டாட்டியை அனுப்புவார்களானல், ஒரு பத்துநாள் சுவாமிமலையில் என்னேடு இருக்கட்டும் என்று நீ திரும்பிவரபோது அழைச்சுண்டுவா ராஜா'' என்ருள். நான் பட்டணம் போகிற உத்தேசத்தைக் கைவிடச் செய்ய அவள் யுக்தி அது. நான் பதில் சொல்லவில்லை.

''போய்ட்டு வரேன் அப்பா!'' என்றேன்.

''ஜாக்கிரதையாகப் போய்ட்டு வா'' என்ருர் அப்பா.

அப்பாவோடு சண்டையையும் அதற்குப் பிறகு கத்திரித்துக்கொண்டு போய்விடலாம் என்று நான் எண்ணியதையும், எல்லோருமாகச் சேர்ந்து கத்திரித்துக் கொண்டு, உறவு விட்டுப் போகாமல் இருப்பதற்கு எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிருர்கள் என்றும் சிந்திக்கிறேன் ரெயிலில் என் டைரியை எடுத்துவைத்து எழுதிக்கொண்டே, குடும்பத்துக்குள் உறவுதான் எவ்வளவு Complex—ஒரு வெட்டில் அறுந்துவிடாது. அறுத்து விட்டதாக நினைத்துக் கொண்டாலும், தப்ப முடியாது. எல்லா உறவு முறைகளுமே love hate ralationship ஆகத்தான் இருக்கமுடியும் என்றுதோன்று கிறது. சிலசமயம் அன்பு-சிலசமயம் வெறுப்பு அதிகமாகிறது ஒரு சமயத்துக்கு ஒரு விஷயம் சரியாகப்படுகிறது. இந்தக் குடும்பப் பிணைப்புகள், அதுவும் நம்மிடையே எவ்வளவு மெல்லியவை - அதேசமயம் எவ்வளவு பலமானவை. நாவல் எழுத இது எவ்வளவு நல்ல விஷயம்! இதை வைத்து யாரும் ஏன் எதுவும் எழுதவில்லை? பெரிய விஷயங்களைத் தேடுகிருர்கள்—சிறு விஷயம். இது போதும் என்று எனக்குத் தோன்றுகிறது

இந்தக் குடும்பப் பிணைப்பிலே ராஜி—புதுசாக வந்தவள். அவள் என்னமாதிரியான புதிர் போடப் போகிருளோ! He who has married a wife has given hostage to fortune என்று proverb சொல்லுகிறது. எழுத்தாளனுக இருக்க விரும்புகிறவன், கல்யாணம் செய்துகொள்ளாதிருப்பது நல்லது. problems குறையும். ஆனல் மாமனர் வீட்டுக்குப் போய்க்கொண்டிருக்கும்போது கல்யாணம் செய்து கொள்ளாமலிருந்தால் நல்லது என்று சிந்தித்து என்ன பலன்? ●

---

# கசடதபற

தனி இதழ்: 30 காசு

ஆண்டுச் சந்தா: ரூ. 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7 தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப்பெற போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்கவும்.

ஆசிரியர் 'கசடதபற'
1 தேவடி தெரு
சென்னை 4

# கரைந்த

'கரைந்த நிழல்'களை எழுதி முடித்துப் பதினன்கு மாதங்கள் முடிந்துவிட்டன. இது புத்தகமாக வந்து ஏறக்குறைய ஒரு வருடம் ஆகப்போகிறது. இன்று இந்த நாவலைப் பற்றி நினைக்கையில் சில சமயங்களில் எப்படி இதை எழுதினேம் என்ற பிரமிப்பு வருகிறது. சில சமயங்களில் ஏன் இதை எழுதினேம், ஏன் இவ்வளவு மட்டும் எழுதினேம் என்கிற கசப்பும் வருகிறது. இந்த இரு முனைகளின் நடுவில் நின்று இந்த நாவலை எழுதினேம் என்பதையும் மறக்க முடிந்திருக்கிறது. என்வரையில் இந்த நாவல் வெகு சீக்கிரத்திலேயே ஒரு குழந்தைப் பிராய அனுபவம் போல் நினைவுக் குவியலில் தங்கி பின் தங்கிப்போய் விடும்.

இந்தத் தலைப்பில் நான் எழுதத்திட்டமிடவில்லை. உண்மையில் இந்த நாவலையே நான் எழுதத் திட்டமிடவில்லை. 'தீபம்' திரு பார்த்தசாரதி ஒரு தொடர் நாவல் எழுத வேண்டும் என்று என்னிடம் கூறியபோது இந்தத் தலைப்பைக் கொடுத்தேன். எனக்குக் கதை சொல்லவராது அதில் எனக்கு வருத்தம் கிடையாது. ஆனல் தீபம் ஆசிரியர் அவர்கள் என்னை 'என்ன கதை?' என்று நாவல் சுருக்கம் கேட்க நான் ஒரு அளவில் நான் என்ன எழுதலாம் என்பதைக் கோடி காண்பித்தேன். அந்நேரத்தில் எனக்குத் தெரிந்ததும் அவ்வளவுதான். கதை சிறிதளவு என் எஸ் கிருஷ்ணன் வாழ்க்கையை யொட்டியதாக இருந்திருக்கும். நான் 'கதைச் சுருக்க'த்தைச் சொல்ல உடனே அவர் அம்மாதிரிக் கதையை அவரே எழுத இருப்பதாகச் சொன்னர்கள். இதற்குள் 'கரைந்த நிழல்கள்' அறிவிப்பு அச்சாகி விட்டது என்று நினைக்கிறேன். அதிலிருந்து குறிப்பிட்ட இதழுக்குள் நான் புதுக்கதை யோசித்து ஆசிரியருக்குச் சுருக்கம் கூறுவதென்பது அசாத்தியமான காரியம் என்று நானும் கூறினேன். அவருக்கும் தோன்றியிருக்கும். ஆதலால் கதைச் சுருக்கம் புதிதாகச் சொல்லாமல் நான் முதல் அத்தியாயம் எழுதினேன். எழுத எழுத ஒவ்வொரு அத்தியாயமும் ஒரு தனி நாவலுக்குரிய பொருளாகவே பட்டது. உண்மையில் ஒவ்வொரு அத்தியாயத்தையும் நானகவே ஒரு அளவிற்கு மேல் வளரவிடவில்லை. நாவல் பத்தே அத்தியாயத்தில் முடிந்து விட்டது பற்றி எனக்குக் குறையில்லை. அதன் 'தலை எழுத்து' அப்படி இருந்திருக்கிறது. 'நீங்கள் ஏன் புத்தகம் போடும் போதாவது இன்னமும் எழுதியிருக்கக் கூடாது?' என்று கேட்கக் கூடும். சிலரின் இயல்பு ஒரு காரியம் ஒரு தடவை முடிந்தது என்று ஏற்பட்டால் மீண்டும் அதனை அணுக மாட்டார்கள். என் இயல்பு அப்படித்தான். எழுதும்போது ஏராளமான அவகாசம் எடுத்துக் கொண்டு, பலமுறை திருப்பித் திருப்பிப் படித்து மாற்றங்கள் செய்தாலும் ஒரு முறை எழுதி முடித்தாகி விட்டது என்று கீழே வைத்த பிறகு உறவே துண்டிக்கப் பட்டு விடுகிறது. இதன் காரணமாகத்தான் கண்டன விமரிசனங்கள் அதிகம் சோர்வு தருவதில்லை. ஆனல் நான் அடுத்து எழுதும் போது அந்த விமரிசனத்தை மனதில் வைத்து அது என் எழுத்திற்கு எவ்வளவு பொருந்துகிறது. என்று பரிசீலனை செய்யத் தவறுவதில்லை.

# நிழல்கள்

அசோகமித்திரன்

'கரைந்த நிழல்க'ளில் ஒவ்வொரு பாத்திரத்திற்கும் ஒரு முன் மாதிரி உண்டு. ஆனல் அந்தப் பாத்திரங்கள் தான் அந்த முன் மாதிரியல்ல. அதாவது பல தகவல்களில் பாத்திரங்களும் முன் மாதிரிகளும் பெரிதும் மாறுபட்டு இருக்கும். சூழ்நிலை reaction கள், இவையெல்லாம் வேறு வேறு. இதன் காரணமாக அந்த முன் மாதிரிகளே இந்த நாவலைப் படிக்க நேர்ந்தால் கூட அவர்களே அது வேறு யாரோ என்றுதான் நினைத்துப் படிப்பார்கள். பல படமுதலாளிகளின் கலவை ரெட்டியார். அதே போலப் பல ஸ்டுடியோ முதலாளிகளின் கலவை ராம ஐயங்கார். பல புரொடக்ஷன் மானேஜர்களின் கலவை நடராஜன். ஆனல் இந்த நாவலில் அந்த ஸ்டுடியோவும் சினிமாவும் அவ்வளவு முக்கியமல்ல. இது மனிதர்களைப் பற்றியது. உண்மையாக இருக்கக் கூடிய மனிதர்களைப்பற்றி ஒரு அந்தரங்கத்தோடு, ஒரு உரிமையோடு எழுதப்பட்டது என்பதுதான் முக்கியம். பிற்காலத்தில் இது ஒரு நலல நாவல் என்றில்லாமல இது சினிமாத்துறை பற்றிய ஒருநல்ல நாவல் என்று கூறப்படுமானல் நான் தோல்வியடைந்தவனுவேன்.

ஒரு திட்டமான முடிவு வைத்துக்கொண்டு எழுதவில்லை. உண்மையில் என்னுடைய கதைகள் பலவற்றிற்கு நான் முடிவை மனதில் நினைத்து எழுதியது கிடையாது இந்த நாவலும் அப்படித்தான்.

தமிழ்ப் படைப்பிலக்கியம் இன்று எழுதுபவர்களில் நான் ந. முத்துசாமியைத் தலைசிறந்தவராகக் கருதுகிறேன். அவர் இந்த நாவல் நன்ருக வந்திருக்கிறது என்று கூறினர். என் எழுத்து சரியான திசையில் இருக்கிறது என்பதற்கு அதைத்தான் வழிகாட்டியாகக் கொண்டிருக்கிறேன். நான் ஏதோ 'சோதனை' செய்கிறேன் என்று எழுதுவதில்லை. ஒன்றை வலுக்கட்டாயமாகச் செய்வதில் எனக்கு நம்பிக்கையில்லை —வாழ்க்கையில் நம் ஜீவனத்திற்காக, குடும்பத்தினருக்காக, உயர் அதிகாரிகளுக்காகச் சில காரியங்களை நாம் வலுக்கட்டாயமாகச் செய்யத்தான் வேண்டியிருக்கிறது. ஆனல் முழுக்கமுழுக்கச் சுதந்திரம் இருக்கும் என் படைப்புச் செயலில் வலுக்கட்டாயம் என்வரையில் நம்பிக்கையற்ற ஒன்று. பொருளாதார லாபத்தை எண்ணியதும் இல்லை. இந்த நாவலிலும் கிடையாது. ரூ. 150/- கிடைத்தது—ஒரு சிறுகதைக்கு ரூ. 1000/- பெற்று விட முடியும் இந்நாளில்.

ஒரு நல்ல வாசகர் குழுவுக்கு இது நான் சொல்லித்தான் தெரிய வேண்டும் என்றில்லை. இந்த நாவல் மொத்தம் எட்டு முக்கிய பாத்திரங்களின் கண்ணேட்டங்களைக்கொண்டது. (அத்தி. 4, 5, 6—ராஜகோபால் என்னும் ஒரே பாத்திரம் — தீபத்தின் இடவசதிக்கேற்ப மூன்று அத்தியாயங்களாக அமைக்கப் பெற்றது) அத்தியாயம் இரண்டும், மூன்றும் telescope ஆகும். ஒரே நிகழ்ச்சி இரு வெவ்வேறு தளத்தில் உள்ளவர்கள் கண்ணேட்டத்தில் எப்படிக் காட்சியளிக்கிறது என்று தெரியும். எட்டு, ராமஐயங்கார் கண்ணேட்டம். ஒன்பதாம் அத்தியாயம் பாச்சா கண்ணேட்டம். இதைப் புரிந்து கொண்டுவிட்டால் நாவல் இன்னும் அர்த்தமளிக்கும். 10-ம் அத்தியாயம் வேறு ஒரு பாத்திரத்தின் கண்ணேட்டம். இதை 'நான்' என்று சொல்வதில் ஒரு சௌகரியம், ஒரு பரவலான தன்மை கிடைக்கிறது. இங்கே, 'நான்' ஆசிரியரல்ல.

இதில் சம்பாஷணைகள் பாதிக்கு மேல் தமிழில் தான் பேச முடிகிறது—காரணம் அவர்கள் உணர்ச்சிகளைக் கூட அறிவின் தளத்திற்கு ஒதுக்கிவிட்டு அந்தத் தளத்திலேயே இயங்குகிருர்கள். ஆனல் அவர்களும் சாதாரண மனிதர்கள்போல் மனதால், உணர்வுகளால் இயங்கும்போது, இயல்பாகச் சொற்கள் தமிழில் தான் வருகின்றன. இந்த இடங்கள் " '——' என்று தமிழில் சொன்னன்" என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கும்.

நான் வேண்டுமென்றே அப்படி எழுதுவதில்லை. ஆனல் என் எழுத்துக்களை இரண்டாம் முறை படிப்பது அவசியமாகி விடுகிறது. முதல் வாசிப்பில் பல தகவல்கள் கவனத்திலிருந்து பிறழ்ந்து விடுகின்றன. பலவற்றிற்குச் சம்பந்தமே இருப்பதாகத்தெரியவில்லை. ஆனல் கதையைத் தெரிந்து கொண்டு இரண்டாம் முறை வாசிக்கும் போது நிறைய விவரங்கள் தெளிவாகின்றன. ஆனல் நான் யாரையும் 'இரண்டு முறை வாசியுங்கள்' என்று வற்புறுத்த முடியாது. முடிந்தால் வாசியுங்கள் என்றுதான் கூறமுடியும்.

நான் செய்ய முடியாத ஒன்றைச் செய்து முடித்ததாக நினைக்கவில்லை. இந்த நாவலை, அல்லது இதே மாதிரி நாவல்களை சிறிது அப்பியாசத்திற்குப் பிறகு, சிறிது முயற்சிக்குப் பிறகு யாரும் எழுதிவிட முடியும்.

(மதுரை இலக்கிய வட்ட இரண்டாவது ஆண்டு விழாவில் படிக்கப் பெற்றது. அனுப்பிஉதவியவர்: ட்டி. ஆர். நடராஜ )

---



ஓவியம் : கே. தாமோதரன்

## பிரெமிட்

மண்புயல் தணிந்து விட்டது.
ஆனால் போர் தொடர்கிறது—இடம் பெயர்கிறது.
சாந்தி வீரர்கள்கூட
ஆபீஸைக் கலைத்து விட்டு
யுத்த சந்நத்தர்களாகின்றனர்.
இப்படியே, பிரெமிட்படிகளில
காலம் உயிர்களை உருளவிடுகிறது—
மலைச்சரிவில் உதிரி இலைகளைப்போல.
ஆனால் வீரனின் உயிரோ
கற்பாறைப் பாலைகளின் சிறுகற்கள் போல்
கணம்தான் என்றாலும்,
ஏதோ ஒரு யோசனையில்
உச்சியை நோக்கி எழக்கூடும்.
உடல் / தான், பிரெமிட்டினுள்ளேயே பதுமையாய்க்
கடவுளரை எதிர்பார்க்கிறது. [கிடந்து

—தருமு அரூப் சிவராம்

## காலத்துக்கு வணக்கம்

மண்டபம் பாழாகி
தூண்கள் தலைமொட்டையாகி
பரதேசிகளுக்குப் புகலிடமாய்
பரிணமித்தது.

மழையாலும் காற்றாலும்
சிற்பங்கள் சிதையவில்லை
எப்போதோவரும்
ஆராய்ச்சியாளனுக்கு
பிழைப்புத் தர
நிலத்தினுள் மூழ்கிக் கொண்டிருக்கிறது.

நிழல்தரும் தூண் ஒன்று
அதன் இடையில
ஆண்பெண் இருவர் புணரும்
உருவங்கள்.
சிற்பி
இலக்கியத்தின் இலட்சணங்களையும்
வாத்சாயனரின் காமத்தையும்
இரண்டறக் கலந்திருக்கிறான்.

மூலைகளில்
முதிர்ச்சி அடைய
இடப்பையன்கள்
கசங்கிய கறையும்
அல்குலில்
தாரைத் தடவிய
முக்கோடும்.

அன்றொருநாள்
அந்தத் தூணின் கீழ்
துணிநீங்கிய இருவர் புணர்ந்திருந்தனர்.
திரும்பிப் பார்த்தேன்
தொழுநோய்ப் பிச்சைக்காரர்கள்.

சிற்பம் உயிரானதைக்கண்டு
காலத்திற்கு வணக்கம் செலுத்தினேன்.

—கி. அ. சச்சிதானந்தம்

# புற்றில் உறையும் பாம்புகள்

ஆர். இராசேந்திரசோழன்

தோட்டப்பக்கம் வேலி ஓரம் கிடந்த சோளத் தட்டுக் கட்டை இழுத்துப் போட்டு உதறி, குத்துக் காலிட்டு அமர்ந்தபடி அடுப்புக்கு தட்டை ஒடித்து சீராய் அடுக்கிக் கொண்டிருந்த வனமயிலி எதிர்வீட்டில் குடியிருக்கும் வாலிபனைப் பார்த்து முணு முணுத்துக்கொண்டாள்.

“கண்ணைப் பாரேன் நல்லா ...... கோழிமுட்டையாட்டம் வச்ச கண்ணு வாங்காம பாக்கறத...இவனல்லாம் அக்கா தங்கச்சியோட பொறந்திருக்க மாட்டானு .....எம்மா நேரமா பாத்துக்னு கிருன்யா இதே மாரி . ...”

பக்கத்தில் சற்றுத் தள்ளி தொட்டியில்கைவிட்டுக் கலக்கியபடி மாட்டைப்பிடித்துத் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்த கந்தசாமி அவன் பாட்டுக்கு பேசாமல் இருந்தான்.

“பாருதே அவன் பாக்கறத...... எங்கனு அசையருனு பாரேன். அவனும் அவன் மூஞ்சும் ...... நல்லா அய்யனாரப்பன் செலையாட்டம் ...”

அவன் தொட்டியிலிருந்து தவிட்டை அள்ளி உள்ளங்கையில் ஏந்தி மாட்டுக்கு ஊட்டினான்.

“எங்கனு ஒதை பட்டாதான் தெரியும் புள்ளாண்டானுக்கு...... இப்படியே பாத்துக்னு இருக்கட்டும். ஒருத்தன் இல்லன்னாலும் ஒருத்தன் எவன்னு கண்ணை நோண்டிப்புடமாட்டான் ஒரு நாளைக்கு... சீ நமக்கு என்னுமோ ஒரு ஆம்பள பாக்கருன்னாலே அம்மா அயக்மா கீது... ஒவ்வொருத்தியாட்டமா ... வ்வா ... கட்டனவன் கண்ணெதுர குத்துக்கல்லாட்டம் குந்திருக்க சொல்லவே ...... சீ! ஜென்மமா அது செரப்பலடி ...”

முகவாய்க் கட்டையை இழுத்து தோள் பக்கம் இடித்துக் கொண்டாள். எதிர்வீட்டை முறைத்து, புருஷனை முறைத்து நன்றாகவே மூடியிருந்த மாராக்கை மேலும் இழுத்து மூடிக்கொண்டாள்.

“பாருய்யா...நீ ஒரு ஆம்பள இங்க குந்தியிருக்க சொல்லவே இந்த பார்வ பாக்கருனே...நீயே கண்டி இல்லண்ணா என்ன செய்வான்... கைய புடிச்சிகூடம் இழுப்பாம் போலக்குது ஏன் இழுக்க மாட்டான்... தொடப்பககட்டை எடுத்துக்க மாடடனு தொடப்பக் கட்டையை...”

அவன் வலது மாட்டைப் பிடித்து முளைக்குச்சியில் கட்டிவிட்டு இடது மாட்டைப் பிடித்து அவிழ்த்துக் கொண்டு வந்தான்.

“அங்க பாருதே ரவ அவனண்ணா ..நீ என்னுமோ இப்பத்தான் ஒரேடியா தண்ணி காட்டற ..தண்ணி... இங்க என்னடா பார்வன்னு நீ ஒரு பார்வ பாத்தினா உள்ள ஒடிப்படமாட்டான் அவன... என்னுமோ குந்திங்கிறியே பேசாத...”

அவன் தொட்டியைக்கலக்கித் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்தான்.

“என்ன ஊராகளி மாடுன்னு நெனச்சிக்னை... பாரேன் பின்ன அவன . நவுருவனான்னு நின்னு பாக்கறத . கிட்ட வந்து பாக்கணம் ... அப்பறம் இல்ல தெரியும் ஆருன்னு .. வனமயிலு எந்த வம்புக்கும் போவாதவள்னுதான் பேரு இவனல்லாமா சும்மா உடுவேன். காறி முழிய வச்சிட மாட்டனு சாணிய கரைச்சி மூஞ்சில ஊத்தி...”

நமுத்துப் போன சோளத்தட்டை சொதுக் சொதுக்கென்று முறித்தாள்.

“என்னுமோ நெனைச்சிக்கினு கிருரு புள்ளாண்டான். ஆபீஸ் உத்தியோகம் பண்றமே ... பாத்ததும் பல்ல இளிச்சிக்னு ஒடியாந்து புடுமனு ... பழமொறத்தாலதான் சாத்து வாங்கன்னு தெரியாது போலக்குது ...”

கைக்கு அடங்குகிற அளவு ஒரு தோற்றம் தெரிந்த சோளத்தட்டுகளை அள்ளி உடம்போடு சேர்த்து அணைத்துகொண்டு உள்ளே வந்தாள்.

“இவரு ஒரு ஆம்பளன்னு கெடக்கருரே... சொரண கெட்டத்தனமா. ... அவன் பாட்டுக்னு கெடப்பாறைய முழுங்கிப்புட்டு நிக்கிறவனாட்டம் நின்னு பாததுக்னுகிருன. ஏண்டா பாவின்னு கூடம் கேக்காம பேசாமகிருரே என்னுமோ ஊமையாட்டம். கேட்டா என்ன வெல்லத்துல வச்சா முழுங்துப்புடுவான் ..இன்னொரு ..இன்னொரு ... ஆம்பளன்னு பாத்துக்னு சும்மா இருப்பானு...”

அடுப்பங் கரையோரம் வைத்துவிட்டு நிமிர்ந்து நின்று தன்னைத்தானே ஒருமுறை உடம்பு பூராவும் பார்த்து மேலே தூசு தும்பு இல்லாமல் புடவை, மாராக்கு, ரவிக்கை யெல்லாம் தட்டிக் கொண்டாள்.

“நான்ன வாசிதான் ஆச்சி. .இதுவே இன்னொருத்தி இன்னொருத்தின்னு சும்மா இருப்பாளா இத்தினி நாளைக்கு ..எப்பவே வாசப்படி தாண்டி எகிறிக் குதிச்சுப்புட்டிருக்க மாட்டாளா... எங்கனு தெரியிதா இந்த ஆம்பளைக்கு ..”

வெளியே வந்து பழைய படியே குத்துக்கால் போட்டு அமர்ந்து தட்டை ஒடிக்க ஆரம்பித்தாள்.

“பாரந்தே ..இன்னும் இங்கதாண்டி நின்னுக்னுகிருன் .. அசைய மாட்டானடியம்மா அந்த எடத்த உட்டு ... இப்படி அப்படி கூடம...”

அவன் மாட்டைப் பிடித்துக் கட்டிவிட்டுப் போருக்குப் போய் வைக்கோல் பிடுங்கத் தொடங்கினான்.

“ஏன்யா அவனுக்கு மக்கா மனுஷாள் ஆரும் கெடையாதா ... வந்த நாளா ஒண்டியாவே கெடக்கிருனே ... ஊருக்கீருக்குக் கூடம் போவாம...”

அவன் வைக்கோல் பிடுங்கினன்.

"நாலு மக்கா மனுஷாள் இருந்திருந்தா கட்டுத் திட்டம் பண்ணி வெச்சிருப்பாங்க...... இந்த மாரில் லாம் பாக்க மாட்டான்...பெருமா. கோவில் காளை மாதிரி அவுத்து உட்டுட்டாங்க போலக்குது...தண்ணி தெளிச்சி..." கழுத்தை சொடுக்கிக் கொண்டாள்.

"ஊடு உன்டு வேல உண்டுன்னு செவனேன்னு கெடக்கறவளையே இந்தப் பார்வ பாக்கருனே ... இன்னும் அங்கங்க கேட்பார் மேய்ப்பார் இல்லாம கெடக்குதே ... அந்த மாரில்லாம் இருந்தா என்ன பண்ணுவான்...சீ ஒடம்புல சீழா ஒடுது ... ரத்தம் ஓடல..."

முகத்தைச் சுருக்கி உதட்டைப் பிதுக்கினள். சோளத்தட்டை பொட்டென்று வைத்தாள்.

பிடுங்கிய வைக்கோலைக் கைகளில் சேர்ந்து அணைத்து மாட்டுப்பக்கம் கொண்டு வந்து உதறினன் அவன்.

"இவன் வந்த நாளா அந்த பங்கஜம் பொண்ண கூடம் வெளியே காணம்யா; உள்ளவே பூந்துக்னு ... ஊட்டஉட்டுட்டுவரமாட்டன்ரு...வந்தா கூடம் மின்ன மாரி குந்தி ஆர அமற நாலு வார்த்த பேசமாட்டன்ரு ...காகா...கான்னு பறக்கரு. என்னுமோ மறந்து வச்சிட்டாப்ல. பாத்துக்கிறியா நீ அதல்லாம்...ஒரே ஊட்டகிருங்க ரெண்டு பேரும்...என்ன நடக்குதோ... ஆருகண்டாங்க.. அந்த காளிம்மாளுக்குதான் வெளிச்சம்"

வைக்கோல் உதறி முடித்தவன் கொஞ்சம் சரிந்து விழுந்த தோட்டப்படலை இழுத்து நிமிர்த்தி சரியாய் வைத்து கட்டிக் கொண்டிருந்தான்.

"எது இந்தக் காலத்துல தெய்வத்துக்கெல்லாம் பயப்புடுது. அது அது இருக்கறவரிக்கும் கும்மாளம் கொட்டிட்டுப் போவுது; ஊருசிரிச்சாக்கூடம் கவல இல்லண்ணு ..எங்கூட்டல்லாம் வயிசுக்கு வந்துட்டா வாசப்படிய தாண்ட உடுவாங்களா...! அந்த மாரில் லாம் வளந்ததுனுலதான் இங்க வந்து புருஷன் உண்டு ஊடு உண்ணு...அதுவே செதமா கெடக்க முடியுது. செலதுங்களாட்டமா...அடியம்மா ...... எப்பிடிதான் மனசுவருதோ ... கழுத்துல கட்டன தாலிக்கிதுரோகம் பண்ண..."

உடம்பை ஆட்டி, அவயவங்களை தொடித்து பாவனையுடன் சிலிர்த்துக் கொண்டாள்.

"என்னுமா ஆடுதுங்க...கேழ்விமொறஇல்லாம..."

அடுத்த கட்டு சோளத்தட்டுகளை அள்ளி தூக்கிக் கொண்டு வரும்போது தெருப்பக்கம் யாரோ நிற்பதையும்குரல் கொடுப்பதையும், கொஞ்சம் ஒருக்களித்த கதவு வழியாகக் கண்டு பரபரப் படைந்தாள்.

"தே .. யரோ வந்திருக்கருங்க தே..."

"ஆரது..." அவன் கழுத்தை மட்டும் திருப்பிக் கேட்டான்.

"நல்ல ஆளுய்யா நீ! ஆருன்ன...எனக்கெப்பிடி தெரியும். நானு என்ன ஊருல இருக்கறவங்கஎல்லாரியுமா தெரிஞ்சி வச்சிக்னுகிறேன்... கட்டிக்னு வந்தது லேருந்து வாசப்படி தாண்டி அறியாதவ நானு... எங்கன ஊருபயணம் போவ தெருவுல நடக்கற துன்னலே அப்படியே ஒடம்பு இத்துப் போயிடருமாரி இருக்கும் எனக்கு... என்ன வந்து கேக்கறியே ஆருன்னு..."

தெருக்கதவு வழியாகத் தோட்டம் தெரிந்துவிடப் போகிறது என்பது போல் சுவற்றில் ஒண்டிக் கொண்டாள்.

"போய் பாருதே! கூப்படருங்க .."

அவன் படல் கட்டுவதை நிறுத்தி விட்டு எழுந்து வந்தான் அடுப்பங்கரையில் வைத்து விட்டு அவனைத் தொடர்ந்து பின்னாலேயே அவளும் வந்தாள். கதவு வரைக்கும் வந்து, மறைவில் உடம்பை வைத்துக் கழுத்தை மட்டும் வெளியில் வைத்து நின்றாள்.

"வாங்க... வாங்க நீங்கதான... உக்காருங்க" அவன் சொன்னான். வெள்ளை சட்டை போட்ட சிவப்பு உடம்புக்காரர் திண்ணையில் உட்கார்ந்தார்.

"நம்ப இந்த கொரனூர் ரோடுபோறது விஷயமா மின்ன ஊர்பஞ்சாய்த்துல பேசிக்னு இருந்தமே... அது விஷயமா ஊருல எல்லார் கிட்டியும் கையெழுத்து வாங்கி ஒரு மகஜர் குடுக்கலாம்னு... அடுத்த வாரம் மந்திரி வர்ராராம் கூட்டேரிப்பட்டுக்கு....." அவர் கொஞ்சம் பேசினர்.

பளிச் சென்று சிகப்பாயிருக்கும் விரல்களால், பாக்கெட்டில் மடித்து வைத்திருந்த வெள்ளை பேப்பரை எடுப்பதையும், பேனா எடுப்பதையும் பார்த்தாள். காய்ந்த தவிட்டுத் திப்பியும் வைக்கோல் சுணையும் உள்ள கையை கையெழுத்துப் போடுவதற்காக கௌபீனத்தில் துடைத்துக் கொண்டிருந்தான் அவன்.

"கைய அப்புவே கழுவக் கூடாதா தே!"

வந்தவர் நிமிர்ந்துபார்த்ததும்தலையைஉள்ளுக்கே இழுத்துக் கொண்டாள்.

'கொஞ்சம் தண்ணி கொண்டாரச் சொல்லுங்க' குடிக்க..."

"ஏமே... கொஞ்சம் தண்ணியாம். மொண்டாந்து குடு தாகத்துக்கு..."

கதவை விட்டு நகர்ந்தவள் காலையில் துலக்கிய பித்தளைச் செம்பை சட்டுபிட்டென்று புளி போட்டு அலம்பி மண குடத்திலிருந்து தண்ணீர் சாய்த்துக் கொண்டாள் மூணு மாசம் வாங்கியிருந்த ஒரே ஒரு எவர்சில்வர்டம்ளரைத்தேடி எடுத்துக் கொண்டு கதவண்டை வந்து நின்றாள்.

"இங்க வாதே இங்கே..."

"கொண்ணாந்து குடுமே அவருகிட்ட..."

"இங்க வாதேன்னா..."

உடம்பை அஷ்ட கோணலாக்கி வளைத்தாள். கதவண்டையே நெளிந்து நாணி கோணிக் கொண்டு அறியாத பெண்மாதிரி நின்றாள்.

கந்தசாமி தண்ணீரை வாங்கி அவரிடம் கொடுத்தான். "கெணத்து தண்ணி கொஞ்சம் உப்பு கரிக்கும்..." அவள் கதவு மறைவிலிருந்து காற்றுக்குச் சொன்னாள். தண்ணீர் குடித்த பிறகு வந்தவர் போய் விட்டார்.

"சரியான ஆளுதே நீ! மின்ன பின்ன தெரியாத ஆம்பள எதுருல வந்துநிண்ணு, நீம்பாடடுன்னு தண்ணி குடுநின்னா... ஆரால முடியறது......எனக்கென்னமோ நெனச்சாலே ஒடம்பே சிலுக்குது...

இன்னும்கூடம் அந்த அயக்கம் போவிலியா... வேர்த்துப் போச்சி தெரியுமா எனக்கு...''

அவள் தோட்டத்துக்கு வந்து சோளத்தட்டு பக்கத்தில் அமர்ந்தாள்.

''நீ சொன்னதும் அப்பிடியே ஜன்மமே குன்னிப் புடுத்தியா எனக்கு...என்ன நெனச்சிக்கின்ரு இந்த ஆம்பள இப்பிடி சொல்லிப்புட்டாருன்னு...எடுத்துப் போட்டா மாரி பூடுத்து ..ஏயா என்ன நெனச்சிக்னு அப்பிடி சொன்ன... கொண்ணுந்து குடுக்கருளா... இல்லியா ...பாப்பம்னு...''

அவன் குறையோடுவிட்ட படலைக்கட்டிக்கொண்டிருந்தான்.

''கதவண்ட நிக்கறதுக்கே உள்ளங்காலல்லாம் கூசுது எனக்கு...அப்பேற்பட்ட பொம்பளைய இவர் என்ன டான்னு ..ஊருபேரு தெரியாத ஆம்பளைக்கி அரிவிகாலதாண்டி வந்து தண்ணி குடுறீன்னரு... நல்லா இருக்குதே ஞாயம்...அந்த மாரிதான் இன்னெரு இன்னெரு நாளைக்கி சொல்லப் போறையா...''

கிடந்த மீதி சோளத்தட்டுகளை ஒடித்து முடித்து தென்னம் அலவு எடுத்துக் இறைந்து கிடந்தசெத்தைகளைக் கூட்டினாள்.

''சில பொம்பிளைவ மொகந் தெரியாத ஆம்பள கிட்ட கூடம் என்னுமா பேசிப்புடுதுங்க...எடுத்த வாய்க்கி வெடுக்வெடுக்குன்னு...நமக்கு என்னடான்னு அப்பிடியே மரவட்ட ஊர்ரு மாரிகிநுபோ...கட்டனவன உட்டு மத்தவன நிமிந்துபாக்கறதுன்னு கூடம் கண்ணு ஒப்பல...''

உடம்பைப் சிலிர்த்து அருவருத்துக் கொண்டாள்

அவன் படல் கட்டுவதை நிறுத்தி தெருவுக்கு வந்து எரவாணத்தில் பனம் நாறு செருகி வைத்திருந்த இடத்தைதேடிக் கொண்டிருந்தான்.

துடைப்பத்தை எடுத்து வந்து வைத்தவள் வெளியேபோய் வேலை எதுவும் இன்றி சும்மா நின்ருள்.

கண்களை இடுக்கிக் கொண்டு வெறிச்சென்று கிடந்த எதிர்வீட்டைக் கூர்ந்து பார்த்துக் கொண்டு நின்ருள்.

கோழி முட்டைக் கண்ணன் மறுபடியும் தோன்றினன்.

கன்னத்தில் கை வைத்து, உள்ளங்கையில் முகவாயைப் புதைத்துக் கண்களை அகல விரித்தாள். ஆச்சர்யத்தோடு பார்க்கிற மாதிரி முகத்தில் ஒரு வியப்புக் குறிதோன்ற அபிநயம் பிடிக்கிற பாவனையில் நின்ருள்.

பின்னுல் நாறு கத்தையுடன் கந்தசாமி வந்தான்.

''பாரன்யா அவன...பழைய படியே வந்து நின்னுக்னு மொறைக்கறத... அப்பிடியே கொள்ளிக் கட்டைய எடுத்து கண்ணுல சுட்டா என்னு இவன...''

''சரிதான் உள்ள போமே பேசாத...சும்மா பொண பொணன்னிகினு...'' அவன் படல் கட்ட உட்கார்ந்தான்.

''இப்பத்தான் ஒரேடியா காட்டிக்கிரு என்னுமோ ...பெரிய பத்தினியாட்டம்...''

---

(ஓலூலூவிற்கு இன்னெரு பதில்)

# ''புதுமை, சோதனை, .....''

வெ. சாமிநாதன்

மேலை நாட்டுத் தத்துவத்தில் Logical Positivism என்ற ஒரு புதிய பிரிவை உருவாக்கிய Carnap, ''Most of our problems in philosophy are not really problems in metaphysics: They are, rather, problems in language and its syntax' எனக் கூறியுள்ளார்.

நம்முடைய பல பிரசினைகள் சிந்தனை அல்லது சிந்தனையின்மையின் காரணமாக மட்டுமல்லாமல் மொழியின் காரணமாகவும் பிறந்துவிடுவதாகத் தெரிகிறது. இன்ன தமிழ் வார்த்தைக்கு இவ்வளவு அர்த்தங்கள் உண்டு என்ற எண்ணிக்கைப் பெருக்கத்தில் மொழியின் வளத்தைக் காணும் பெருமை மயக்கத்தை உதிர்த்து உதறிவிட்டு, அர்த்தங்களுக்கு ஏற்ப மொழியின் கூர்மையின்மை, மொழியின் பாழ்மை எனவும், இப்பாழ்மைக்குக் காரணங் கூரிய சிந்தனை யின்மை எனவும் நாம் உணர்ந்து கொள்வது நல்லது.

புதுமை என்ற சொல்லை வெகு சாதாரணமாக, அலட்சிய பாவத்தோடு நாம் கையாள்வதாகத் தோன்றுகிறது. நமது அன்ருட வாழ்க்கையின் அவசர, அலட்சிய சௌகரியங்களுக்காக, சில வார்த்தைகளை கவனமின்றிக் கையாண்டு விடுகிரேம். ஆனல் இலக்கியம், அறிவியல், கலைகள் பற்றிய சர்ச்சைகளில் நாம் இன்னும் சற்றுக் கவனத்துடன் சிந்திப்பதும், சிந்தனைகளை மொழிப்படுத்துவதும் நல்லது. இன்னுமொன்று. பல விஷயங்களை அதன தன் பின் புலத்தில், சந்தர்ப்பங்களில், ஆத்மார்த்தத்தில் புரிந்துகொள்வது அவசியம்.

''ஆப்பிள் விழுவதைக் கண்ட நியூட்டன்'' என்று சொல்கிரேம். உண்மையில் நியூட்டனின் ஐயங்களும், ஆராய்வுகளும் எழக்காரணம், ஆப்பிள் பழம் 'விழுந்தது' அல்ல. 'ஒரு குறிப்பிட்ட திசை நோக்கிச் சென்றது'தான். ஏனெனில் ஆப்பிள் விழுவதைக் காணும் முன்னமேயே, நியூட்டனின் சிந்தனையில் முன்னின்றது, கண்களின் பார்வை எட்டும் வரைத்திய இட விஸ்தாரம் அல்ல, முழு பிரபஞ்சத்தின் விஸ்தாரமும் ஆகும். அத்தகைய பிரபஞ்சத்தின் விஸ்தாரத்தில் 'விழுதல்' என்ற செயலுக்கு இடமில்லை. ஏனெனில், அவ்விஸ்தாரத்தில் மேல், கீழ், இடம், வலம், தெற்கு, மேற்கு என்ற மனக்கோள்களுக்கு இடம் இல்லை. ஆகவே, 'ஆப்பிள்' ஒரு திசையிலிருந்து மறுதிசை நோக்கிச் செல்லும் செயலே, 'வீழ்தல்' என்ற நம் வார்த்தைகளில், நம் பார்வை அனுபவக் குறுகலின் பரிமாணத்தில், பெயர் பெறலாயிற்று. ''வீழ்தலை'க் குறித்து ஐயங் கொள்ளும் முன்னே பிரபஞ்சத்தின் விஸ்தாரத்தை தன் அநுபவத்திற்குள்ளாக்கும் பார்வை அத்தியாவசியமாகிறது. இப்பார்வையின் சந்நதியில் 'வீழ்தல்' அநுபவமோ பின் எழுந்த ஆராய்வோ, கண்டு பிடிப்போ, அடுத்தடுத்த படிகளாகி விடுகின்றன. அப்பார்வைதான் நியூட்டன், நியூட்டனின் ஆகர்ஷண சித்தாந்தம்.

புதுமை அல்ல. முன் இருந்த ஒன்றின் வெளிக் கண்டு பிடிப்பு.

இப்பார்வை (என்ன செய்வது, துரதிர்ஷ்டம் தான்) மரபினால் பிறப்பதல்ல. உழைப்பினால், படிப்பினால் தருவிக்கப்படுவதல்ல. சோதனையினால் பெற முடிவதல்ல.

இப்பார்வையில் எப்பொழுது, எத்தகைய flashes படும் என்று சொல்வதற்கில்லை. இப்பார்வையை, flashes-ஐ, பாமர மத ஐதீக பாஷையில், 'கருவிலே திரு' எனத்தான் சொல்ல வேண்டும். வெரும் சலியாத உழைப்புக் கொண்டவர்களுக்கு அவ்வாறுதான் தோன்றும். ஏனெனில் நியூட்டனின் சித்தாந்த தோற்றத்தை எத்தகைய உழைப்பு, ஆராய்வு ஆகியவற்றின் மொத்தக் கணக்கினாலும் முழுதாக நிரூபித்து விடமுடியாது. ஒரு டிராக்டர், ஒரு Bulldoser வேலை செய்வதைபார்த்து விடமுடியும். ஆனால் ஒரு T.V. அல்லது radio antennae, அலைகளை ஈர்ப்பதைப்பார்க்கமுடியாது. [ராமானுஜத்தையே எடுத்துக் கொள்வோமே. (நான் பாமரனாக உள்ள எத்தனையோ விஷயங்களில் கணிதசாஸ்திரமும் ஒன்று. தெரிந்தவர்களிடம் கேட்டதை சொல்கிறேன்) நியூட்டனுக்கும் பிக்காஸோவுக்கும் முன்னும் பின்னும் எனக்காட்டுவதுபோல, ராமானுஜத்திற்கு ஒரு முன் பின் மரபைக் காட்டமுடியாது. அந்த அளவில் ராமானுஜம் 'கருவில் உயிர்த்த ஒரு திரு தான். எவ்வளவோ வருஷங்களுக்கு முன் கண்டு தீர்த்த பிரசினைகளைத்தான் (சென்னை கஸ்டம்ஸ் ஆபீஸ் பைல்களுக்கிடையே அமர்ந்து, அல்லது புடைசூழ்ந்த கும்பகோணம் கொசுக்களை விரட்டிக் கொண்டே) தன் method of induction வழியாக, சுயம்புவாகக் கண்டு தீர்த்த பெருமையைத் தவிர கணித வரலாற்றில் ஏதும் புதிய அத்தியாயத்தைச் சேர்த்தபெருமை அவருக்கு உண்டெனச் சொல்வதற்கில்லை. இதுகாறும்கடந்துவந்தகணிதசாஸ்திரசாதனை விஸ்தாரம் அவருக்கு தெரிந்திருந்தால் அவர் மேற்சென்றிருக்கக்கூடும். ஆனால் இளமையில் மாண்ட துர்ப்பாக்கியம் அவரது. இருப்பினும் ராமானுஜம் என்ற மாபெரும் சக்தியை, 'கருவில் உதித்த திருவை' நாம் ஞாபகம் கொள்கிறோம்.]

சரி 'கருவின் திருவான' இப்பார்வை இல்லாவிட்டாலோ?

ஓவியத்தில் வங்காள மரபைஸ்தாபித்த, வளர்த்த அபனிந்திர நாத் டாகூர், கேந்திர நாத் டாகூர், ரபீந்திரநாத் டாகூர், நந்தலால் போஸ் முதலியோர்கள், மரபு அறிந்தவர்கள், பரவலான உலக ஓவிய முயற்சிகள் எல்லாம் அறிந்தவர்கள். சலியாதுஉழைத்தவர்கள். பலகாலம் தொடர்ந்து இயங்கியவர்கள். இருப்பினும், அவ்வங்க மரபுக்கு இந்திய ஓவிய வளத்தில் இடம் எங்கே? எதிராக, பஞ்சாபி தந்தைக்கும் ஹங்கரிய தாய்க்கும் பிறந்த சுமார் பத்து வருடங்களே ஓவிய வாழ்க்கை பெற்ற, தனது 29-ம்வயதில் இறந்த அம்ரித் ஷேர்கில் இந்திய ஓவிய மரபின் நவீன காலத்தின் முதல்பெயர். எப்படி நிகழ்ந்தது? எத்தகையபாரம்பரிய ஞானத்தையும்உழைப்பையும்,ஆராய்வையும்கூட்டிப்பெருக்கி இதை விளக்குவது? அன்று அம்ரித்தைக் கண்டித்தவர்கள் இப்படித்தான் சொன்னார்கள்: "Paul Gauguin-ஐப் பிரதிஎடுக்கிறாய்? எங்கள்உழைப்பு மரபு ஞானம், ஆராய்வு இவற்றிற்கு முன் 24 வயதுச் சிறுமி நீ எங்கே?" என.

## சிலை

முலையின் செழுமையை அர
சிலைக்குக் கொடுத்தால்
கலைப் பொருளாகாமல்,
குலைந்து போய் விடும்
விலைமகள் போலென, து
கிலைச் சுற்றினானே
சிலையை வடித்த சிற்பி?

—வீனஸ்

டி. எஸ். இலியட்டி'ன் 'பாழ்நிலம்' எழுதப்பட்டது 1922-ல். அவருடைய 34-ம்வயதில். நமக்கு அதுபுதியதல்ல அவர் அநுபவித்தது விஞ்ஞானத்தில் "கண்டு பிடிப்பு" என்று சொல்கிறோமே அது போல, அவர் கண்ட ஒன்றை, இருந்த, நிகழ்ந்த ஒன்றை எடுத்து உணர்த்தியது புதுமை அல்ல. அதை எடுத்து உணர்த்த மொழியை (ஒரு கருவியை) கையாண்ட விதம், உருக்கொடுத்த விதம் புதுமை. அவருக்கு முன் இருந்த மரபைக் கொண்டு அப்போதைய இலியட்டின் வயதைக்கொண்டு, "பாழ் நிலம்" தோன்றியதைக் கணித்திருக்க முடியாது. நாம் பார்க்க முடிவது, 'பாழ்நிலம்' திடீரெனத் தோன்றியதைத்தான். இதைக் கொண்டு, அன்று நாம் இலியட்டைக் கண்டனம் செய்திருக்க முடியும். "கருவிலே தோன்றிய திரு' வென நினைத்தாயோ, கொங்கணவா?" என.

விளக்கம்? பார்வை. இப்பார்வைதான் நமக்குப் புதிய தரிசனங்களைத் தருகிறது. இலக்கியம், கலை, அறிவார்த்த துறைகளுக்கு வளம் சேர்க்கிறது. இதை நாம் உழைத்து, ஆராய்ந்து, மரபைக்கணித்து—பிறப்பித்து விடமுடியாது. இத்தகைய பார்வை கொண்ட அசாதாரணங்களைப் பொறுத்துத்தான், "எதிலும், (இலக்கியத்திலும்) முதல்தரம், இரண்டாம்தரம் ஈனத்தரங்கள் பிரிக்கப்படுகின்றன. ஏன் சிறந்த தரம், முதல்தரம் இல்லை என்று கேள்விகள் கேட்டு பதில்கள் சுலபமாகப் பெற முடியாது. அப்பதில்கள் திருப்திகரமானவையாகவும் இருக்க முடியாது.

பார்வை என்றதும் அதன் பின்புலத்தில், சோதனை, ஆராய்வு, வெட்டி விலகுதல், ஒட்டி வாழ்தல் என்ற கருத்துக்களைப் பார்க்க வேண்டும்.

பார்வை என்பது உடன் பிறப்பு. வளர்ச்சியின் உடன் வாழ்வு. இப்பார்வையின் செயலாற்றலைத்தான் தன் இயல்பான இயக்கத்தைத்தான், சோதனை, ஆராய்வு, வெட்டி விலகுதல், ஒட்டி வாழ்தல், என்றெல்லாம் நாம் சொல்கிறோம். ஆனால் பார்வை கொண்டவனோ தன் இயல்பான இயக்கத்தில் இவ் வார்த்தைகளை அர்த்த மற்றவைகளாகக் காண்பான். காஃப்கா நமக்குப் புதுமையாகத்தோன்றலாம். தவறு. அவனது உலகம் நமது உலகம். நாம் உணர, பார்க்கத் தவறிய உலகம். கற்பனையல்ல. கற்பனை என்ற வார்த்தைதான் கன்னித் தமிழ் உலகில் எவ்வளவு உக்கிரமாக விபசாரிக்கப்படுகிறது. நதானியல் ஸாரோட் சொன்னார்: இப்பொழுதெல்லாம் ஃப்ரான்ஸில் க்யூவில் நின்றோ, பாஸ்போர்ட் வாங்க bureaucratic jungle-ல் புகுந்து வெளிவந்தோ, வேலை தேடி அலுவலகப் படிகள் ஏறி இறங்கியோ இப்படியாக அன்றாட அநுபவங்களைப்பற்றிச் சொல்லும் போது,

"I had been through a kajkaresque experience' என்று சொல்வது ஒரு புழங்கும் பொதுவழக்காகியிருக்கிறது'' என்ருர். sartre existentialism, அவர் ஆராய்ந்து சோதனை செய்து பெற்ற புதுமை அல்ல. அதை காஃப்காவிலிருந்துதொடங்கலாம். சற்றுப் பின் நகர்ந்தால் டாஸ்டாய்வ்ஸ்கி தட்டுப்படுவார். இன்னமும் பின்போனல் Kierkegaard, கிரேக்க புராணங்கள், ஸீஸிபஸ் கதையிலிருந்தும் தொடங்க வேண்டியிருக்கும். இதற்குள்ளேயே கிரீஸ், டென்மார்க், ரஷ்யா, செக்கோஸ்லாவேகியா, ஃப்ரான்ஸ் என்று பல நாடுகளைத் தொட்டுவிட்டதுதெரிகிறது. வேலுமித்திரனின் *''ஒதுங்கிய வீதியில் ஒரு கடை'' என்ற சிறு கதையைப் படித்தவுடன் தமிழ் நாட்டையும் தொட்டு விட்டது தெரிகிறது. அக்கதையில் காஃப்காவைப் பார்க்கலாம். மேலெழுந்த வாரியாக ஹெமிங்வேயின் கடலும் கிழவனும் கூடத் தென்படுவார்கள். ஹெமிங்வே, காஃப்கா என்ற பெயர்களைக் கேட்ட மாத்திரத்தில் பேனவைக் கையிலெடுத்து கதை தீட்டிய 'கருவிலே திரு' பெற்றவராக 'வேலுமித்திரனை'க் கேலி செய்து விடமுடியாது. ஏனெனில் அது முழுக்க முழுக்கத் தமிழ் அநுபவ உண்மை. 'Kajkaresque' என்ற ஒரு தனி உலகம்கிடையாது காஃப்காவுக்குப் பின் தோன்றிய கற்பனை அல்ல. 'Kajkaresque' என சொல்வது ஒரு குறிப்பீட்டுச் சௌகரியத்திற்காகத் தான்.

சி. மணியின் 'நரகம்' சிலருக்கு டி. எஸ். இலியட்டின் பாழ் நிலத்தை ஞாகமூட்டலாம். டி. எஸ். இலியட் செய்ததை, பிரதி எடுத்ததாகச் சொல்லலாம். இரண்டிலும் ஒரு விரக்தி, கசப்பு, கண்டனம், கேலி—பொதுவான குணங்கள். ஒன்று மேலே உலக நாகரிகத்தின் கண்டனம். மற்றது தமிழ் நாட்டின் இன்றைய நிலையைக்கண்ட கசப்பு. அததது அவரவர் உலகம். டி. எஸ். இலியட் ஒரு கதவைத் திறந்ததும், அக்கதவின் வழியே சி. மணி கண்ட தமிழ் நாட்டைப்பற்றிய அனுபவம் 'நரகம்' இலியட்டிடமிருந்து கவிதை உருவத்தையும், உத்தியையும், சொல்லும் பாணியையும் சி. மணி எடுத்துக்கொள்கிருர். ஒரு பெரும் வித்யாசம் இதுவரைக்கும் இப்படியெல்லாம்வளைந்துகொடுக்காத தமிழ்மொழியையும், கவிதைமரபையும்,இவ்வுத்தியின், பாணியின் காரியங்களுக்கு ஏற்றவகையில் கையாண்டுள்ளார். இது மொழியின் கவிதையின் கருவிப்பயனை வளர்த்திருக்கிறது. மெக்ஸிகோவின் புதுரககோதுமை விதைகளைப்பார்த்து தமிழ் நாட்டில் ஆடுதுறை புதிய ரக நெல் விதைகளை விளைவிக்கும் விவகாரம்.

ஆனல்,—இது பெரிய 'ஆனல்'. உலக இலக்கிய பாரம்பரியத்தில் சி. மணியின் 'நரகத்திற்கு' இடமில்லை. 'பாழ்நிலம்'—உலகத்தின் ஒரு பிரதேச விஸ்தாரம் தான். 'நரகம்' மாறுபட்ட புதுமை அல்ல. தமிழ் இலக்கியத்தில் அதற்கு இடம் உண்டு. ஒரு கருவியாக, தமிழ் மொழியும், ஒரு புது மரபாக தமிழ்க் கவிதையும் 'நரகத்திற்கு' கடன் பட்டிருக்கின்றன.

விளக்கத்திற்கு இன்னும் ஒன்றுகூடச் சொல்லலாம். உலக இலக்கிய பாரம்பரியத்தில் (தமிழ், வங்காளி உட்பட்ட) ஆழ்வார்கள், மாணிக்கவாசகர், ஆண்டாள் உட்பட்ட ஒரு உலக இலக்கிய பாரம்பரியத்தில் ரவீந்திரநாத் டாகூரின் அத்தனை கவிதைகளுக்கும், நாடகங்களுக்கும் ஏதும் இடம் இல்லை. வங்காள மொழியில் டாகூர் புதுமையாக இருக்கலாம். ஆனல் அவரது பார்வை, உலகம் எல்லாமே, அவருக்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்னலேயே, ஆண்டாளும், ஆழ்வார்களும், மாணிக்க வாசகரும் சாதித்துவிட்ட பார்வையும், காட்டிவிட்ட உலகமும்

* கணையாழி மார்ச் 70

காதல்

மந்தையில்

ஈரத்திட்டை முகர்ந்த இளங்காளை

சிலிர்த்து கனைத்து தலை உயர்த்தி

சிரித்தது.

—குமரித்துறைவன்

---

ஆகும். 'இலியட் செய்ததையே நீயும் செய்திருக்கிருய்?' என்று சி. மணியைக் கேட்கும் கேள்வியை, கொஞ்சம் குறைந்த நியாயத்துடனும், உரிமையுடனும் ''ஆண்டாள் செய்து விட்டதை இப்பொழுது நீ ஏன் செய்கிருய்?'' என்று டாகூரைப் பார்த்துக் கேட்கலாம். கேட்கமுடிவதில்லை. காரணம், தமிழனின் துரதிர்ஷ்டம். ஆங்கிலத்தின் அதிர்ஷ்டம். உலக சரித்திரம் நிகழ்ந்துவிட்ட கதியின் சதி. ஆனலும் டாகூரின் கவிதைகள், நாடகங்கள் அத்தனையும் டாகூரின் தன் இயல்பான இயக்கத்தில், தன் வளர்ச்சியில் பிறந்தவை. வங்காள சரித்திரம் அதற்கு நியாயம் கற்பிக்கிறது. வங்க மொழி அதனல் வளமடைந்திருக்கிறது.

இவற்றை நாம் பிரித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். சிந்தனை, கலை, அறிவியல், எல்லாம்உலகப் பொதுமைகள். கல், வர்ணம், மரம், உலோகங்கள் உலகப் பொதுமைகள். மொழி அவ்வாறல்ல. ஐன்ஸ்டைனுக்கு அடுத்த படியைத்தான் இங்கு நர்லிகார் எடுத்து வைக்கவேண்டும். chelsea கற்களும் மகாபலிபுரக் கற்களும்ஒன்றுதான். ஹென்ரிமூரும், பார்பாரா ஹெப்வொர்த்தும் சாதித்தவற்றைக்கட்டாயம்அறிந்து அவற்றிற்குப் பிறிதான, மாருன. மேலான ஒன்றைச் செய்யத்தான் தமிழ்ச் சிற்பி உளி எடுக்க வேண்டும். ஆனல் மொழி அப்படி அல்ல. ஆங்கில வசனத்தின் கடைக் கொழுந்து எனப் போற்றப்படும் ஜேம்ஸ் ஜாய்ஸ் வரை, ஆங்கில மொழியை எவ்வாறெல்லாமோ வளைத்து, நீட்டி, திருப்பி, சீர்படுத்திவைத்திருக்கிருர்கள். இங்கு ஒரு மௌனி, தன் உலகத்தைச் செதுக்க, லாசரா தன் தரிசனத்தைக் காட்ட தமிழ் மொழியுடன் பெரும்பாடு பட வேண்டியிருக்கிறது. இவ்விருவருக்கும் அவரவர் உலகம், தரிசனம் அவர்களது இயல்பான இயக்கத்தைச் சார்ந்தன. வளரும் வாழ்வைச் சார்ந்தன. ஆனல் அவ்வுலகத்தை, தரிசனத்தை மொழிப்படுத்தலில் தான் சோதனைகள், உழைப்பு தேவைப்படுகின்றன. இங்கு நாடு குட்டிச் சுவராகிக் கிடக்கிறது. மொழி குட்டிச் சுவராகிக் கிடக்கிறது. தமிழ் மொழியே, அக் குட்டிச் சுவர்களின் சாணங்களுக்கிடைப்பட்ட''......திலகம், ... அழகன், ... கலைஞர், ... கலை'' என்ற வார்த்தைகளுக்குள் அடங்கிவிட்ட பயங்கரத்தை அநுபவித்துக் கொண்டிருக்கிறது. இவ்வார்த்தைகள் கொண்ட எழுத்து அச்சுக்களுக்குத்தான் தமிழ் நாட்டு பிரஸ்களில் அதிகத் தேவையோ என்னவோ, எழுத்து அச்சுக்கள் தயாரிக்கும் ஃபவுண்டரிகளைக் கேட்டால் தெரியும். 'கன்னித்தமிழ்,' 'கன்னித் தமிழ்' என எவ்வளவு பலமாக, பரவலாகக் கோஷ இரைச்சல்கள்

எழுகின்றனவோ அவ்வளவுக்கு அத் தமிழ்க்கன்னி புலவர்களாலும், வித்வான்களாலும், அறிஞர்களாலும் அரசியல் வாதிகளாலும், எழுத்தாளர்களாலும் வெகு உக்கிரத்துடன் விபசாரிக்கப்பட்டு வருகிறாள். இவ்வாறு குட்டிச் சுவராகி, சாணங்களுக்கிடையே அழுந்திக் கிடக்கும் தமிழ்க் கன்னியை, உயிர்ப்பித்து பவித்ரமாக்க வேண்டியிருக்கிறது. மௌனி, லாசரா போன்றவர்கள் அதையும் தான் செய்கிறார்கள். நனவோடை என்றவுடனேயே ஜேம்ஸ் ஜாய்ஸையும் லாசராவையும் நினைவூட்டிக் கொள்ளும் நாம், இவ்விருவர் கையிலும் இவ்வுத்தி எவ்வாறுமாறுபட்டுள்ளது என்பதைக் கவனிப்பதில்லை. இம்மாறுபாடு, வெவ்வேறு மொழி, வெவ்வேறு கலைப்பிரக்ஞை, வெவ்வேறு சிந்தனை உணர்வு அளித்த மாறுபாடு. இருவர் உலகமும், பார்வையும்தனித்தனி. ஜேம்ஸ் ஜாய்ஸின் இலக்கிய ஸ்தானம் நாவலாசிரியராக அல்ல. ஆனால் கதாசிரியராக, நாவலாசிரியராக, லா.ச.ரா.வின் இலக்கிய ஸ்தானம் மறக்கப்பட முடியாதது. அவரது உலகமும், தரிசனமும் தனித்தது என்றகாரணத்தால், பார்வைகள் வேறுபட்ட காரணத்தால், தரிசனங்கள் மாறுபடும் காரணத்தால், கையாளும் மொழி வேறுபாட்டால், சப்த உறவினால் பின்னப்படும் ஜேம்ஸ் ஜாய்ஸின் நனவோடை உத்தியிலிருந்து காட்சி பிம்ப உறவுகளினால் பின்னப்படும் லா ச.ராவின் நனவோடை உத்தி மாறுபடுகிறது. நனவோடை என்று படித்தவுடன் நனவோடை இலக்கியம் தீட்டுகிறவர்கள் என யாரையும், நனவோடை உத்தியைக் கையாள்பவர்களையெல்லாம் சொல்லி விடுவது சுலபம். ஆனால் அது விமர்சன மாகாது இப்படி யாரையும், எதற்கும் ஒன்று சேர்த்து விடமுடியலாம். நாம் யாரையும், எதுவும் சொல்வதற்கு முன்னால் அவரது இயல்பான இயக்கம் அவரது வளர்ச்சி வாழ்வு, பார்வை, படைப்பு எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்கவேண்டும். இவை பிரிக்கப்பட்டால் நாம் தவறுகளில் ஆழ்த்தப்பட்டு விடுவோம்.

இப்படிப் பார்க்கும் போதுதான் நமக்குப் பல விஷயங்கள் மலைப்பைத் தருகின்றன, சிலரைப் பொருத்தவரையில் அகிலன், சாண்டில்யன், நா. பா. கல்கி, மு. வரதராசனார் (டாக்டர், மாணவர் உலகத் தந்தை) போன்றோர்களின் பார்வை, இயல்பான இயக்கம், வளர்ச்சி இவற்றின் பின்புலத்தில் இவர்கள் எழுதிக் குவித்திருக்கும் புத்தக மலைகளைப் பார்த்தால், —ஒவ்வொருவருக்கும் தனித்தனி லாரி தேவையாக இருக்கும். சுய சிந்தனை, உழைப்பு இவற்றால் இவை சாத்தியமா என்ற மலைப்பு ஏற்படுகிறது. எந்தத் தேவியின் வாய்த் தாம்பூலத்தமிழ்து உண்டு பெற்ற வரப்பிரசாதமோ என்ற மலைப்பு ஏற்படுகிறது. அதே சமயம் மௌனியும் லா. ச. ராவும் எழுதியுள்ளது எவ்வளவு என்று நினைத்துப் பார்க்கலாம். போகட்டும்.

மற்றும் ஒன்று: இயல்பான இயக்கத்தில் சுய வளர்ச்சியின் வாழ்வில் வெட்டி விலகுதலும் இல்லை. ஒட்டி வாழ்தலும் இல்லை. தான் தான் உண்டு. தன் பார்வைதான் உண்டு. சி. மணியின் 'நரகம்' வேலுமித்திரனின் 'ஒதுங்கிய கடை" இவற்றில் வெட்டி விலகுதல் எங்கே நடக்கிறது? இவைதானே தமிழ் நாடு? இவர்கள் தானே தமிழ் வாழ்க்கை அநுபவத்துடன் ஒட்டியவர்கள். வெட்டி விலகியவர்கள்என, அகிலன், நா.பா. கல்கி, தமிழ்சினிமா, தமிழ்நாடகம், தமிழ்

## ஒரு தாஓ கவிதை

சோளக் கொல்லைப் பொம்மையிடம்

இரவல் பெற்ற தொப்பியின்மேல்

மழை வலுத்துப் பெய்கிறது.

தமிழில் : ஞானக்கூத்தன்

அறிஞர்கள், அரசியல்வாதிகள், கலைஞர்கள், புலவர்கள் என்போரைச் சொல்லவேண்டும் தமிழ் வாழ்க்கைக்கும், இவர்கள் அநுபவம், இயக்கம் போன்றவற்றிற்கும் ஏதும் ஒட்டிய தன்மை உண்டா? தமிழ் வாழ்க்கையிலிருந்து வெட்டி விலகிய இத்தகையோரிடமிருந்து வெட்டி விலகியவர்கள் என வேண்டுமானால், சி.மணி, வேலுமித்திரன், முத்துசாமி, ஞானக் கூத்தன் போன்றோரைச் சொல்லலாம். மரபு எது? உலக கலா இலக்கியப் பாரம்பரியத்தை எடுத்துக் கொண்டால், அம்மரபில் வருபவர்கள் ஒட்டி வாழ்கிறவர்கள் தமிழ் தொடர்கதைப் பிரபலங்களும், சினிமாக்காரர்களும், அறிஞர்களுமா அல்லது முத்துசாமியும், லாசராவும் மௌனியும், ஞானக்கூத்தனும், க.நா.சுவுமா? யார் உலக மரபைச் சேர்ந்தவர்கள்? தன் இயல்பானவர்கள்? ஒதுங்கியவர்கள்? ஆடும்பாவைகள்? ஆட்டுபவர்களின் இயக்கங்களை இயல்புக்கு மாறானவையாகவும், ஆடும் பாவைகள் இயல்பான இயக்கங் கொண்டவையாகவும் தோன்றும்.

சோதனை, மரபு விலக்கல், ஒட்டல், புதுமை என்றெல்லாம் முனைந்து செயல்படுதல் அவ்வளவு அர்த்தமுள்ளதாகத் தோன்றவில்லை. முதலும் முடிவுமாக தீர்க்கமாக, முழுமையாக, ஒவ்வொருவரும் தானாக, தன் இயல்பாக இருத்தல்தான் முக்கியம். ஜீவத் துடிப்புடன் வாழ வேண்டும் (one should be alive) தன்னுடன், தன் உலகத்துடன், தன் மொழியுடன், சங்கீதம், ஓவியம், இலக்கியம், சிற்பம், சினிமா, நாடகம், அறிவியல், தத்துவம், அன்றாட வாழ்வு ஆக இவ்வொவொன்றுடனும் ஜீவத்துடிப்புடன்வாழவேண்டும், எதிர் கொள்ள வேண்டும் இவை ஒவ்வொன்றுடனும் ஆக வேண்டும் ஒவ்வொன்றையும் ஆக்க வேண்டும் பரிசோதனையும், புதுமையும், ஒட்டி வாழ்தலும் வெட்டி விலகுதலும் தானாக நிகழும். தன் ஜீவத்துடிப்புடன் எதிர்கொள்ளல் எதன்பாற்பட்டதுசோதனையா, புதுமையா, வெட்டிவிலகலா, ஒட்டிவாழ்தலா? என்பதையெல்லாம், பின்னோக்கும்போது காலம்பெயரிட்டுக் கொள்ளும். இவை முன்னோக்கித்திட்டமிட்டுச் செயலாற்றுவதல்ல. மேற் குறிப்பிட்ட எவற்றுடனும் சம்பவிக்கும் எதிர் கொள்ளலில்லை, ஒருவனின் ஜீவத் துடிப்பு செத்து விட்டால், அவ்வளவிற்கு அவன் இயக்கம் குறைபட்டது. இவ்வாறு ஜீவத்துடிப்புடன் வாழ்வதைத்தான், எதிர்கொள்ளலைத்தான் நாம்செய்யமுடியும். இத்துடிப்பின் செயலாற்றலில் விளைவது சிறந்த படைப்பா முதல் தரமா, கடைத்தரமா?—என்பனவெல்லாம் இயங்குபவன் நிர்ணயிப்பதல்ல. திட்டமிட்டுக் கொள்வதல்ல. அவன் பொறுப்புமல்ல. இயக்கமே, ஜீவத்துடிப்பின் ஆதி, அந்தம், நியாயம் எல்லாம்.

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi